# விவேக போதினி

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."——திருவள்ளுவர்

தொகுதி VII { ஆனந்த௵ ஆனி௴ =1914-௵ ஜூலை௴ } பகுதி 1



## வேதாந்தத் திரட்டு

## VEDANTIC SELECTIONS

### 6. தாயுமானவர்

### 8. உள் நாட்டம்

அண்டபகிரண்டமும் மாயாவிகாரமே
யம் மாயை யில்லாமையே
ஆமெனவு மறிவுமுண் டப்பாலு மறிகின்ற
வறிவினை யறிந்துபார்க்கின்
எண்டிசை விளக்குமொரு தெய்வவருளல்லாம
லில்லையெனு நினைவுமுண்டிங்
கியானென தறத்துரிய நிறைவாகி நிற்பதே
யின்பமெனு மன்புமுண்டு
கண்டன வெலாமல்ல வென்று கண்டனைசெய்து
கருவி காணங்களோயக்
கண்மூடி யொருக்ஷணமிருக்க வென்றாற்பாழ்த்த
கர்மங்கள் போராடுதே
பண்டையுள கர்மமே கர்த்தாவெனும் பெயர்ப்
பக்ஷநானிச் சிப்பனோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே.

(பரிபூரணானந்தம்—4)

### 9. தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமும் வழிபாடும்

அங்கைகொடு மலர் தூவி யங்கமது புளகிப்ப
வன்பினா லுருகிவிழிநீர்
ஆறாக வாராத முத்தியின தாவேச
வாசைக்கடற்குண் மூழ்கிச்
சங்கர சுயம்புவே சம்புவே யெனவுமொழி
தழுதழுத்திட வணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்கனேனையுந்
தன்னருள் கொடுத்தாள்வையோ
துங்கமிகு பக்குவச் சனகன் முதன்முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபானு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லாலடிக்குள் வளர்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(சின்மயானந்த குரு—1)

### 10. தக்ஷிணாமூர்த்தி உபதேசம்

கூடுதலுடன் பிரிதலற்று நீர்த்தொந்தமாய்க்
குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றுமேல் கீழ் நடுப்பக்கமென
நண்ணுதலு மற்றுவிந்து
நாத மற்றைவகைப் பூதபேதமு மற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலு மற்று மேலொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரிபூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(சின்மயானந்த குரு—8)

# CALENDAR—பஞ்சாங்கம்

| யோ | துலு | இங் | தமிழ் | வார | ஆநந்தவருடம் ஆடிமாதம் { சாலிசகம் 1836 கலியப்தம் 5015 } பசலி 1324 கோல்லம் 1089 { 1914 வருடம் ஜூலை—ஆகஸ்டுமாதம் |
|---|---|---|---|---|---|
| ரபு | 21 | 16 | 1 | வியா | நவ 56-24, அசு 29-35, திரு 2-41, தை 23-54, திவி 18-26, ரா 24-22, அக 31-28, கடகாரவி 4-29. தரு 3, ரிசுபுத 5-21, சூன்யதிதி தக்ஷிணாயன-ஆடிபண்டிகை சூன்யார்கம். |
| சு | 22 | 17 | 2 | வெ | தச 60-0, பா 35-12, சூல 43-55, வணி 28-12, தியா—0—0 மக 3, சுக் 7-2, கடக கிரு தசமிதிதி கரிநாள். |
| ச | 23 | 18 | 3 ஆடி | சனி | தச 0-44, ❋ கார் 40-46, கண் 44-41, பத் 0-44, திவி 8-9, மிதுனசனி 37-28, கார் உப |
| ரசெ | 24 | 19 | 4 | ஞா | ஏகா 1-23, ரோ 45-21, விர் 44-38, பா 4-23, திவி-23-59, பூச 1, ரவி 35-5, பூர 3, செ 48-0, மக-4, சுக்60-0, சர்வஏகா |
| சு] | 25 | 20 | 5 | திங் | துவா 6.55, மிரு 48-55, துரு 43-45, தை 6-55, திவி 0-11, அக 31-26, பிரதோ |
| | 26 | 21 | 6 | செ | திர 8-21, திரு 51-9 வியா 41-49, வணி 8-21, திவி 10-42, யா-சி மழை 5-க்குள் |
| புசு | 27 | 22 | 7 | புத | சது 8.25, புன 52-10, ஹர் 38-53, சகு 8-25, திவி 21-39, திரு 4, புத 10-9 பூர 1, சுக் 51-26, சர்வ அமா ஆடிஅமா |
| ர | 28 | 23 | 8 | வியா | ● அமா 7-17, பூச 52-0, வஜ் 34-59, நா 7-17 திவி 11-7, பூச 2, ரவி 5-32, தீபஸ்தம்ப பூ, இஷ்டி |
| செ | 29 | 24 | 9 | வெ | பிர 5-0 ஆயி 50-41, வித் 30-9 பவ 5-0, திவி 29-13, அக 31-24, சிரா சுத் சிம்மாய 20-41 பூர 4, செ 41-42, சங் சரி |
| புசு | 1 | 25 | 10 | சனி | துதி 1-37. திரு 55-49, மக 48-32, விய 24-33, கௌ 1-37, திவி 19-36, புன 1 புத 48-0, பூர 2, சுக் 45-0 விய சிரா |
| ர | 2 | 26 | 11 | ஞா | சது 52-18, பூர 45-31, வரி 18-16, வணி 24-52, திவி 7-32, பூச 3, ரவி 36-4, சது விரு நாகசதுர்த்தி [கரிநாள் |
| | 3 | 27 | 12 | திங் | பஞ் 46-45, உத் 42-0, பரி 11-25, பவ 19-31, திவி 2-28, நாகசெருடபஞ்சமி பிரவாகத்திஞல்சிலவிடங்களில்சவுக்கியம் |
| புசு | 4 | 28 | 13 | செ | சஷ் 40-50, ஹஸ் 38-6, சிவ 4-13, சித் 52-31, கௌ 13-47, திவி 1-38, ரா 25-22 அக 31-22, புன 2 புத 40-17 பூர 3 சுக் 9-48, சஷ் உப |
| செ | 5 | 29 | 14 | புத | சப் 34-41, சித் 34-1 சா 49-7 கர 7-47, சே 0-44, ரா 15-42, உத் 1-செ 35-7 சப் விரு சீதளாசப்தமி மழை 3-க்குள் |
| ரகு | 6 | 30 | 15 | வியா | அஷ் 28-39, சுவா 29-56, சுப 41-33, ப 28-39, ரா 11-41, பூச 4 ரவி 6-35, அவி 1-வக்கு 46-17, அஷ்டமிதி |
| புசு | 7 | 31 | 16 | வெ | நவ 22-48, விசா 26-5 சுப் 34-15 கௌ 22-48, ரா 14-12, புன 3 புத 27-17, பூர 4 சுக் 5-29, திதித்வயம் வரல க்ஷுமி விரு |
| | 8 | 1 | 17 | சனி | தச 17-22, அனு 22-41, பிரா 27-15, கர 17-22, ரா 4-44, அக 31-17, ஏகாதிதி |
| ர-பு | 9 | 2 | 18 | ஞா | ஏகா 12-29. கே 19-50, பா 20-53, பத் 12-29, ரா 7-51, ஆயி 1 ரவி 36-5 கடகபுத 9-53, சர்வ ஏகா வைசிரா |
| செசு | 10 | 3 | 19 | திங் | துவா 8-19, மூல 17-45, வை 14-58, பா 8-19, திவி 13-45, ரா 15-57 கன்னிசெவ் 28-31 |
| | 11 ரம்ஜான் ஸ் | 4 | 20 | செ | திர 5-8, பூரா 16-39, விஷ் 9-57 தை 5-8, ரா5-4, கரிநாள் மழை4க்குள் [உத் 1 சுக் 1-12, பிர |
| புசு | 12 | 5 | 21 | புத | சது 3-3, உத்தி 19-40, பிரி 5-47. வணி 3-3, திவி 26-42, அக 31-14, பூச 1 புத 8-30, கன்னி சுக் 58-0 யஜுர்வேதிசிராவணம் ரக்ஷாப சிர கர்ம சர்ப போ பூ சிர உப |
| ர | 13 | 6 | 22 | வியா | ○ பௌ 2-8, திரு 17-52, ஆயு 2-33, பவ 2-8, திவி 28-17, ஆயி 2 ரவி 5-30, இஷ்டிரிக் வேதி சிராவணம் காயத்திரிஜபம் [24-8, சத 2 ராகு மக 4 சேது 36-46, |
| புரா | .14 | 7 ஆகஸ்டு ஸ் | 23 | வெ | பிர 2-32, அவி 20-21, சௌ 0-23, சோ 58-49, கௌ 2-32. ரா 8-16, சிரா பகு பூச 2 புத |
| செசு | 15 | 8 | 24 | சனி | துதி 4-14, சத 24-2, அதி 58-56, கர 4-14, ரா 10-8, உத் 3 செ 21-58 உத் 3 சுக் 54-0, |
| ரபு | 16 | 9 | 25 | ஞா | திரு 7-3, பூபட் 28-46, சுக 59-28, பத் 7-3, ரா 23-53, அக 31-10 ஆயி 3 ரவி 34-56, பூச 3 புத 27-13, சங் சது |
| | 17 | 10 | 26 | திங் | சது 10-52, உத் 34-24, திரு 60-0, பா 10-52, தியா—0—0 மழை 7 க்குள் |
| புசு | 18 | 11 | 27 | செ | பஞ் 15-24, ரே 40-34, திரு 0-36, கை 15-24 திவி 7-29, பூச 4 புத 30-20, உத் 4 சுக் 50-15, சஷ்டிதிதி |
| | 19 | 12 | 28 | புத | சஷ் 20-16. அசு 47-0 சூல 2-3, வணி 20-16, ரா 3 47, அதிதி |
| ரசெ பு] | 20 | 13 | 29 | வியா | சப் 25-8, பா 53-15, கண் 3-36, பவ 25 8, திவி 13-30, அக 31-8, ஆயி 4 ரவி 3-45, உத் 4 செ 15-15. ஆயி 1 புத 33 30, சப்தமிதிதி ஜன்மாஷ்டமி காளாஷ்டமி தசாபல அகஸ்திய உதயம் 3-45, |
| பு | 21 | 14 | 30 | வெ | அஷ் 29-25, ❋ கார் 59-1 விர் 4-54, கௌ 29-25, திவி 26-8 பிரகாஸ்தபுத 55-7 அஷ்டமிதிதி சூரி ஸா ம கார்உட |
| புசு | 22 | 15 | 31 | சனி | நவ 33-19, ரோ 60-0, திரு 5-45, தை 1-22, ரா 11-7, ஆயி 2 புத 34-2, ஹஸ் 1 சுக் 17-28 கட கிரு நவமிதிதி |
| ர | 23 | 16 | 3 | ஞா | தச 35-59, ரோ 3-49, விபா 5-53, வணி 4-39, திவி 18-41, வி மாவி 32-4, சூன்யதிதி விஷ்ணுபதி [ஸ்ரீ ஜயந்தி |

| | | சனி | புத |
|---|---|---|---|
| ராகு. | 3-மிதுனச 18-கடகபு | | ரவி |
| குரு. | 19-கன்செ 21 கன்சுக் | | செ, சு கே |
| | | | |




# விவேக போதினி

தொ. 7.] ஆனந்தஸு ஆனிமீ [பகுதி. 1


## மோக்ஷ ஸோபானம்

### THE STEPS TO THE GOAL

(2) கர்மயோகம்

பீஷ்மர் சரித்திரம் (தொடர்ச்சி)

இதுவரையில் கூறிவந்தவைகளிலிருந்து, பீஷ்மர் தமது வாழ்நாள் முழுவதும் கர்மயோகமுறைப்படியே தமது காரியங்களை எல்லாம் நடத்தி வந்தும், முக்யமாக மூன்று விஷயங்களில் அவர் கர்மயோக அனுஷ்டானம் எல்லோருக்கும் வெளிப்படையாக ஓங்கி விளங்கியது என்பது தெரியவந்திருக்கும். அவையாவன:— (1) தகப்பனரை திருப்திப் படுத்த பிரஹ்மசரியம் பூண்டது: (2) பூண்டபிரஹ்மசரியத்தை நிலைநிறுத்தியது: (3) தமக்கு ஏற்பட்ட சில தர்மவிஷயக் குழப்பத்தால் கொடியவர்பாலிருக்கும்படி நேர்ந்தும், ஒழுங்கு தவறாது நடந்துகொண்டது என்பவைகளே. இவைகளுள், முன்னர் முதல் இரண்டையும், மூன்றாவதில் பீஷ்மருக்கு ஏற்பட்ட குழப்பம் இன்னது, அது இவ்வாறு அவரைக் கொடியவர் பக்கம் இருத்திவிட்டது என்பதையும் எடுத்து விளக்கியாகிவிட்டது. இங்கு, இப்படிப்பட்ட கஷ்டநிலை அவருக்கு உண்டான போதிலும், அவர் இவ்வாறு கர்மயோக ஒழுங்குதவறாது நடந்து கொண்டார், என்பதை எடுத்து விவரிப்போம்.

'பீஷ்மர் தர்மாத்மாவாயினும், யுத்தகாலம் வந்தால் நம்புறம் இருந்துதான், உதவி புரிவார்' என்று நம்பிக்கொண்டிருந்த துர்யோதனன், யார் புத்திமதியையும் கவனியாது, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவையும் உதறித் தள்ளிவிட்டு மஹா பாரத யுத்தம் தொடங்கிவிட்டான். யுத்தத்திற்கு முன்னர், எல்லோரும் ஒரு கூட்டம் கூடி, யுத்தவிஷயத்தில் ஆலோசிக்கலாயினர். அதில், பீஷ்மர் தமது கஷ்டநிலையையும் தாம் அனுஷ்டிக்கவேண்டிய கர்மயோக வழியையும் நன்கு ஆராய்ந்து, துர்யோதனனை நோக்கி 'அப்பா, நான் உன்னிடமே இருந்து பழகிவிட்டேன். ஆதலால் நியாயம் பாண்டவர்களிடமிருந்தபோதிலும், நான் உன்புறமே இருந்துதான் உதவிசெய்வேன். அந்த விஷயத்தில் ஒருவித ஸந்தேஹமும் கொள்ளாதே; பாண்டவர்களுக்கு ஒருவித தேஹஸஹாயமும் செய்யும் நிலை எனக்கு இல்லை. ஆனால், என் மனம் அவர்கள் ஜயத்தையும், உன் அபஜயத்தையும் தான் கோரிக்கொண்டிருக்கும். இந்த விஷயத்தைக்குறித்து நீ துக்கித்துப் பயனை இல்லை. இதற்கு அறி குறியாக, நான் பாண்டவர்களை மாத்திரம், யுத்தத்தில் கொல்லவேமாட்டேன். அவர்களும், உன்னைப்போல எனக்கு அருமைப்பேரர்கள் தானே! தந்தை இழந்து தவிப்பவர்களல்லவா? மேலும், அவர்கள் தர்மச்சிறப்பிற்கும் உன் அதர்மக் கொடுமைக்கும் எவ்வளவு தூரம்? அவர்களை என் கையால் கொல்ல எனக்கு எப்படியடா மனம் துணியும்? இப்படி இருப்பினும், நீ உணராது அவர்களுக்கு ஒருவித ரஹஸ்ய உதவியும் புரிந்துவிடுவேன் என்று எண்ணாதே. மேலும், பாண்டவர்கள் பக்கமிருக்கும் சிகண்டி, முதலில் பெண்ணாகவிருந்து ஆணானவன். அவனைக்கண்டால் முன் ஞாபகம்வர. நான் சண்டையிடமாட்டேன். ஆதலால், அவன் என்னை அதிகமாகக் குறுக்

கிடாமல் நீங்கள் பார்த்துக்கொள்ளவேண்டும். இவ்வளவுதான். என் மனத்தில் உள்ள ரஹஸ்ய மான குழப்பங்களை வெளியிட்டு விட்டேன் உங்களுக்கு. இவைகளில் பாண்டவர்களுக்கு முன்னதை வெளியிடவே மாட்டேன். பின்ன தை வெளியிடத்தகுந்த தருணம் வந்தாலொழிய வெளியிடேன். ஆகவே, இவைகளால் நான் உனக்குச் செய்யப்போகும் உதவிக்கு யாதொரு குறைவும் வாராது. அதிகமாகச் சொல்லுவானேன். நான் உயிரோடிருந்து போர் செய்யும்வரையில், பாண்டவர்களுக்கு ஜயமே இல்லை என்று நம்பி இருக்கலாம் நீ' என்று தமது கர்மயோக ஒழுங்கை திடமாக வெளியிட்டார். அப்பொழுது நடந்த யோசனை முடிவில் துர்யோதனன்பீஷ்மருக்குஸேனாபதிப் பட்டாபிஷேகம் செய்தான். மேல், அங்கு நடந்த பாகுபாட்டில் பீஷ்மர், கர்ணன் மிகபராக் கிரமசாலியாயினும், அவனுக்கிருந்த சாபக் கொடுமை கெட்டகாரியப் பிரியம் இவைகளால் அவனை அர்த்தரதர் என்ற தாழ்ந்த ஜாதிவீரருள் சேர்த்து அர்ஜுனனைவிட எவ்வளவோ தாழ்ந்தவன் என்று கூறிவிட்டார். இதனால், கர்ணனுக்கு மிகுந்தகோபம் வந்துவிட, "இந்த பக்ஷபாதியான பீஷ்மர், சண்டை செய்கிறவரையில் நான் வில்லம்பெடுத்துப் போர் புரிவதில்லை," என்று அவன் சபதம்செய்து, யுத்தத்தைவிட்டு ஒதுங்கிவிட்டான்.

இப்படி எல்லாம் ஆக, தகுந்த ஸமயத்தில் பாரதப்போர் தொடங்கியது. பாணப்ரயோகம் தொடங்குமுன் பஞ்சபாண்டவர்களும் கிருஷ்ணனும் பீஷ்மரிடம்வந்து அடிபணிந்து, யுத்தம் தொடங்க அனுமதிகேட்டனர். என்ன செய்வார் பீஷ்மர்! பேரன்மார்கள் எல்லோரும் சேர்ந்து வாழமுடியாமல் போய்விட்டதேஎன்ற துக்கம் பாதித்தது ஒருபுறம்: பேரர்கள் என்றால் இந்த தர்மாத்மாவான பாண்டவர்களல்லவோ பேரர், துர்யோதனாதியரை பேரர் என்று மதிப்பது எப்படி என்ற ஸங்கோஷமும் வெறுப்பும் ஒருபுறம்: இப்படிப்பட்ட பேரப்பிள்ளைகளுக்குஸஹாயம் ஒன்றும் செய்யமுடியவில்லையே; இந்தப் பாழும் பாவிகள் பக்கம் இருக்கும்படி யாகிவிட்டதே என்ற பதைப்பு ஒருபுறம்: ஆக இவ்வாறு பீஷ்மர் மனம் சின்னபின்னமாகச் சிதறியது. 'நாம்தான், இந்தக் கஷ்டஸமயத்திலும் நடக்கவேண்டிய வழியைத் தீர்மானித்தாகிவிட்டதே! இனி என்ன சஞ்சலம்,' என்று மனதை ஒருவாறு தேற்றிக் கொண்டிருக்க பகவான்பீஷ்மர் மனோநிலையைக் கண்டு மெச்சிஅனுக்ரஹம் நிறைந்த திருஷ்டியுடன் அவரைக்கண்கொட்டாதுநோக்க தர்மபுத்திரைத் தடவிக் கொடுத்துக்கருணையுடன்நோக்கி அவர் கூறுகிறார். 'ஹே தர்மநந்தன! பணம் பொல்லாது; எல்லோரும் அதற்கு அடிமையே ஒழிய அது ஒருவருக்கும் அடிமை யாவதில்லை. இதனால் நான் துர்யோதனனிடம் கட்டுப்பட்டுவிட்டேன். உனக்கு ஒரு ஸஹாயமும் செய்யமுடியாது என்றால். உன் சிறப்பை நோக்கில் உனக்கே நான் உழைத்துத் தீர்த்திருக்கவேண்டும். நான் அதற்குக் கொடுத்துவைக்கவில்லை. ஆதலால் ஜயமடைந்து சீரும் சிறப்புமாக நீ வாழக்கடவாய் என்று மனப்பூர்வமாகத்தான் எனக்கு இப்பொழுது உங்களுக்கு ஆசீர்வாதம் செய்ய முடியும். இது வெறும் வார்த்தைமாத்திரம் அல்ல என்பதற்கு வேறு விஷயமும் கூறிவிடுகிறேன். நான் தாத்தா என்று அன்பால் என்னிடம் சண்டையில்தயங்காதீர்கள். யுத்தத்தில் யார் வந்தாலும் கொல்லவேண்டியது க்ஷத்ரியன் பொது தர்மம். அதன்படி நீங்கள் என்னைக் கொல்லலாம். எனக்கு அதுதான் இப்பொழுது மிகத் திருப்திகாமானது. நான் சண்டைசெய்யும் வரை உங்களுக்குஜயம் வரப்போ

கிறதில்லை. ஆதலால், என்னை யுத்தகளத்தில் அடித்துத்தள்ள உங்களுக்கு மனப்பூர்வமாக அனுமதிகொடுக்கலாம் நான். ஆதலால், நிர்ப் பயமாக யுத்தம் தொடங்கி, என்னைக்கொன்று, இதோ இருக்கிறாரே இந்தப் பரமாத்மா கிரு பையால் உங்கள் தர்மசிந்தைக்கேற்ற சிறப் பைப் பெறுங்கள்' என்று மொழிந்தார்.

தர்மபுத்திரருக்கு அடங்காத் துயரம் வந்து கவிந்துகொண்டது. 'தாதா! இப்படியா வந்து விட்டது எங்கள் விதியின் கொடுமை! உங்க ளைக் கொன்றுவிட்டா நாங்கள் சிறப்புற்று ஓங் கவேண்டும். இனிமேல், என்ன செய்வது? உங்களைக் கொல்வதற்கு உபாயம் ஏதாவது உண்டா?' என்றார். அதற்கு பீஷ்மர் 'அப்பா! அது கூற இது தருணம் அல்ல. உங்கள் மனம் என்மேல் அன்புடனிருக்கையில் அது, கூறினாலும் உங்களுக்குப் பயன்படாது. நான் இப்பொழுது கூறவுங்கூடாது. யுத்தம் நடக் கட்டும். எப்பொழுது நான் செய்யும் சண் டையால் நான் இறந்தால்தான் மேல் சண்டை நடத்தமுடியும் என்று உங்கள் அன்பெல்லாம் நீங்கி, உங்களுக்கு ஒபாது படுகிறதோ அப் பொழுது வாருங்கள் நான் கூறி விடுகிறேன். அதுவரையில், பொறுங்கள். நாழிகையாகி விட்டது; போய் யுத்தம் தொடங்கலாம். என் னைக்கொல்ல நீங்கள் என்ன உபாயம் செய்தா லும் எனக்கு திருப்திதான் என்பதை மற வாது உத்ஸாஹமாய்ச் சண்டையிடுங்கள்'' என்று கூறிப் பாண்டவர்களை அனுப்பிவிட் டார். மேலவர்கள் துரோணதி ஆசாரியர் களைக்கண்டு ஆசீர்வாதமும் யுத்தம் தொடங்க அனுமதியும் பெறுங்கால், ஒவ்வொருவரும் முக்யமாக த்ரோணர், தமது குறைவு சிறப்புக் களைக் கூறி தம்மைக் கொல்லும் விஷயத்தை மனக்கனிவுடன் பாண்டவர்களுக்கு எடுத்து விளக்கிவிட்டனர். இதிலிருந்து இந்த மனக் கனிவான ஸமயத்திலும் பீஷ்மர் தமதுமரணே பாயம் கூறுதிருந்தது அவர் கர்மயோகச் சிறப்பை எப்படிக் காட்டுகிறது பாருங்கள்!

கர்மயோகப்படி மனதை பாண்டவர் ஜய ஆசீர்வாதத்திலும், தேஹத்தை துர்யோதன ஸஹாயத்திலும் பீஷ்மர் செலவிட்டு மிகுந்த உக்ரமாகச் சண்டை செய்தார் முதல் பத்து நாள். இதில் இவர் சண்டை செய்த சிறப்பை மஹாபாரதம் பீஷ்ம பருவத்தில் விஸ்தாரமா கக்கூறப்பட்டிருக்கிறது. இவர் சண்டைசெய்த மாதிரியைப்பார்த்தால்,எல்லோரும் இவருக்கு துர்யோதனனிடம் மிகுந்த பற்று என்றும் பாண்டவர்களிடம் மிகுந்த வெறுப்பென்றும் எண்ணுவார்கள். இந்த பத்துநாள்களுள் மூன் றும்நாளும் ஏழாம் நாளும் இவர்சண்டைவெகு உக்கிரமாகப் போய்விட, பகவான் ஆயுதமெ டேன் என்று செய்த உறுதிமொழியைக் கூட விட்டு, சக்ராயுதத்தை எடுத்துக்கொண்டு ஓடி பீஷ்மர் மேல் விட்டு அர்ஜுனனை தைர்யப்படுத் தவேண்டியதாகிவிட்டது. பகவான், பீஷ்மரை நோக்கி ஓடிவரும்பொழுது, அவரது குறை களை எடுத்துக்காட்டி அவரைப் புண்படுத்திக் கொண்டுவர, அதையும் மஹாபக்திமானன பீஷ்மர், தமது கர்மயோகநிலையை நினைப்பூட்டு வதாகக்கொண்டு பகவானுக்கு ஸாஷ்டாங்க தண்டனிட்டார் யுத்தகளத்திலேயே. இப்படி கோரயுத்தம் செய்கையிலேயே தன்னிலை மறவாதிருந்தார் பீஷ்மர்.

இப்படி பீஷ்மர் என்னதான் சண்டைசெய் தும் இரு கக்ஷியும் மாறி மாறி ஏறி இறங்கி வந்ததே ஒழிய பாண்டவர்கள் பக்கம் அபஜயக் குறிகள் காணப்படவே இல்லை. வரவர துர் யோதனனுக்கு பீஷ்மரிட மிருந்த நம்பிக் கை குறைந்துகொண்டே வந்தது. எட் டாம் நாள் முதல், அவன் தன் சஞ்சலத் தை பீஷ்மரிடம் வாய்விட்டுக் கூறவும் தொ

டங்கிவிட்டான். யுத்தம் முடிந்து எட்டாம் நாள் வந்ததும் துர்யோதனன் பீஷ்மரை நோக்கி, 'தாத்தா நீர் என்ன சண்டை செய்தும், பாண்டவர்கள் கைதாழ்வதில்லையே! என்ன செய்வது' என்று கேட்கத் தொடங்கினன். அதற்கு பீஷ்மர், 'அப்பா நான் அப்பொழுதே சொல்லவில்லையா, உன் கக்ஷி ஓங்காது நீ அநியாயக்காரனுய் இருப்பதால்,' என, துர்யோதனன் 'நான் உம்மை நன்ருகச் சண்டைசெய்யச் சொன்னல், என்னைக் குற்றங்கூறிப் புண்படுத்த இந்த ஸமயம் தாஞ பார்த்தீர்?' என்று துக்கித்தான். அதற்கு பீஷ்மர், 'நாளை என்னலானதை முழுவதும் பார்த்துவிடுகிறேன்' என்று வாக்களித்து அவனை அனுப்பிவிட்டார். 'நம் மனதாரச் சண்டையிட்டுப் பார்த்துவிடுவோம் நாளை' என்று தீர்மானித்து, மறுநாள் கொடியபோரும் செய்தார். பாண்டவர்களுக்கு, இனி பீஷ்மர் உயிரோடிருந்தால் ஜயமே வாராது; ஆதலால் அவரை வெட்டிச் சாய்த்துவிடவேண்டியதுதான் என்ற யுத்த ஆவேசமும் குழப்பமும் அன்று மாலை உண்டாகிவிட்டது. அவர்கள் கை அன்று வெகு தாழ்ந்துவிட்டபடியால் பீஷ்மரிடம் இருந்த தாத்தா என்ற அன்பும் சற்றுக்கழன்றுவிட்டது. என்னசெய்தென்ன? காமாலைக்காரனுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள்தானே. பீஷ்மர் என்ன செய்தும், அவர் முதலில் கூறிய தமது பாண்டவ கருணையே துர்யோதனன் மனதைவிட்டு அன்று அகலவில்லை. அவர் செய்த ஒவ்வொரு காரியத்தில் அவர் பாண்டவர் பக்ஷபாதத்தால் புகுந்துவேலைசெய்யாது மழுப்புகிறூர் என்றுபட்டது அவனுக்கு. அன்று மாலை, பீஷ்மரை நன்ருக ஒளிபாது கேட்டு இந்த விஷயத்தை முடித்துவிடவேண்டும் என்ற பரபரப்பு துர்யோதனனுக்கு அப்பொழுதே உண்டாகிவிட்டது. மாலைப்பொழுது எப்பொழுது வரும் என்று கூலிக்காரன்போல மேற்கே அடிக்கடிபார்த்துக்கொண்டு நின்றுன் துர்யோதனன். பாண்டவர்களோ களைத்துநடு நடுங்கிக்கொண்டு நின்றனர் அன்று.

பீஷ்மர் மரணத்தைக்கூடத் தாம் அனுஷ்டித்துவரும் கர்மயோக அங்கமாகவே எப்படி ஏற்றுக்கொண்டார் என்பதை மேல் எடுத்து விவரிப்போம்.

---

# ஸதாசிவப்ரம்மம்

என்ற

## ஸித்தரின் திவ்ய சரித்திரம்

## SADASIVA BRAHMAM (*A Life Sketch*)

'ஸதாசிவப்'ரம்மம்' என்றுநாமம்பூண்டமஹாத்மா தென் இந்தியாவில் செழித்தோங்கி புகழ்பெற்ற இராஜயோகீச்வரர்களில் மிகப் பிரக்யாதிபெற்று ஞானபரராய் வாழ்ந்து வந்த பிரஹ்மஞேத்தமர். இஞ்ஞானியாரை, 'ஸதாசிவேந்திர ஸரஸ்வதி' என்றும் சிலர் சொல்வார்கள். இவர் ஸுமார் இருநூறுவருடங்களுக்கு முன், மாஞ்சோலையாலும் தென்னஞ்சோலையாலும் அலங்கரிக்கப்பெற்ற மிகப் பரிசுத்தமான காவேரியாற்றின் வளம்பொலிந்த தஞ்சாவூர் ஜில்லாவில் கும்பகோணம் என்றசிறப்புற்றோங்கிய பட்டணத்துக்கருகாமையிலுள்ள 'திருவசநல்லூர்' என்று பெயர் பொருந்திய வளப்பம் மிகுந்த கிராமத்தில் பிறந்தவர். இக்கிராமம், தொன்று தொட்டு பண்டிதர்களுக்காகப் பெயர்பெற்றது. இவர் 'ஜானகிபரிணயம்' என்ற நாடகமியற்றிய மிகப் பிரஸித்தமான ஸ்ரீ இராமபத்ர தீக்ஷிதரவர்களிடம் இலக்கண இலக்கியங்கள் பயின்றுள்ளவராம். 'ஐயாவாள்' என்று பிரசித்திபெற்ற ஸ்ரீ வெங்கிடேச சாஸ்திரிகளவர்களும், மஹாபாஷ்யம் ஸ்ரீ கோபால கிருஷ்ணசாஸ்திரிகளவர்களும், நம்முடைய பரமாநந்தருடன் கூடப்படித்தவர்களாம். நம்முடைய பிரம்மஞானியார், அறிவில் மிகத்தேர்ச்சிபெற்றபின், இவருடைய ஸம்ஸாரம், இவர் வாஸம் செய்துவந்த கிராமத்துக்கருகாமையிலுள்ள ஒருகிராமத்தில் புஷ்பவதியானளென்ற ஸமாசாரம் தெரியவந்ததும், நாட்டு வழக்கத்தை யொத்து இந்த ஸந்தோஷகரமான ப்ரகாரணத்தை முன்னிட்டு இவருடைய தாயார் அன்றையதினம் மற்றைய நாட்களைக்காட்டிலும் கொஞ்சம் விசேஷமாக விருந்துணவுகள் செய்தாள். அதனல் நம்முடைய மஹானுக்குச் சாப்பாட்டுக்குச் சற்று தாமதமேற்பட, ஸம்ஸாரம் பெரியவளாய் விட்டாளென்ற ஸங்கதி தெரியவந்த வுடனேயே 'சாப்பாட்டுக்கு இவ்வளவு தாமதமாய்விட்டதே? இனி அவளும் நம்முடைய கிரஹத்துக்கு வந்துவிட்டால் நம்முடைய கதி நிரம்பமோசமாய்ப் போய்

விடு'மென்று முழு நம்பிக்கை கொண்டு அன்றைக்கே, ஸம்ஸார ஸாகரத்தில் முழுகக்கூடாது, பரலோகஸாதனத்தை இப்பொழுதே தேடவேண்டுமென்று தம் மனதில் திடச்சித்தஞ் செய்துகொண்டு தம்முடைய வீட்டை விட்டு அகன்று வெளியில் புறப்பட்டுவிட்டதாகப் பிரஸித்தி. இப்படிப்புறப்பட்ட சிலநாட்களுக்கெல்லாம் இவருடைய யோக்கியதைக்கு அனுகுணமாக ஒரு ஸத்குருவினுடைய பரிச்சயம் இவருடைய ஜன்மாந்தர விசேஷத்தால் இவருக்குக் கிடைத்தது. இத்திவ்ய புருஷர் பெயர் 'ஸ்ரீபரமசிவேந்திர ஸரஸ்வதி.'

இந்தப் பரமோத்தமருடைய ஸாமர்த்தியத்தையும் புகழையும் பற்றிப் புகல நம்மால் இயலாது. நம்முடைய ஸித்தர் தம்முடைய குருவினிடம் வேதாந்த சாஸ்திரத்தைப் பயின்றதும், யோகாப்பியாஸத்தில் மிகத் தேர்ச்சி பெற்று, இக்குரு ஸங்கீத சாஸ்திரத்திலும் நிபுணரானதினால், அதிலும் சொற்ப பரிச்சயம் செய்து வந்ததாகவும் தெரியவருகிறது. இக்காலத்தில் தான் நம்முடைய ஞானியார் அனேக அபூர்வ கிரந்தங்களை இயற்றினாராம். அவைகளில் 'பிரம்ம ஸூத்திர விருத்தி,' 'ஆத்ம வித்யா விலாஸம்,' 'ஸித்தாந்த கல்பவல்லி' 'அத்வைத ரஸ மஞ்சரி,' இவைகள் முக்கியமானவைகள். இம்மஹான் செய்திருக்கும் கீர்த்தனைகள் மிக அருமையானவை. நம்முடைய ஸ்ரீமான், சாஸ்திர நுட்பமான விஷயங்களைப்பற்றித் தம்முடைய குருவுடன் பலதடவைகளில் வாதம் செய்து வந்ததாகவும், இவருடைய அதிகநுட்பமான கேள்விகளுக்கு உத்தர மெளிதிலளிக்க முடியாது இவருடைய குருவே சிற்சில ஸமயங்களில் மயங்கினராம். இச்சிறந்த குருவைத் தரிசிக்கப் பல விடங்களிலிருந்து வித்வான்கள் வருவதுண்டாம். அவர்களையெல்லாம் நம்முடைய யோகீச்வரர் கேள்விகள் கேட்டு, அவர்கள் விடையளிக்க முடியாது, பலதடவைகளில் மிக மனவருத்தமடைந்து, ஒரு ஸமயத்தில் மனம் பொறுது நமது ஸித்தரைப்பற்றி குருவினிடத்தில் புகாராவாகத் தெரிவிக்க, அக்குரு கோபம் மூண்டு 'ஸதாசிவா! எப்பொழுது உன் வாயடைக்கும்,' என்றுகடிந்துகூற, 'நம்முடைய திவ்யாத்மா இதனைக்கேட்டுக் கிலேசமடைந்து குரு இவ்விதம் சொல்லலாயிற்றே' யென்று மிகவெட்கி, தாம் அது பரியந்தம் செய்த தவறுதல்களை மன்னிக்க வேண்டுமென்று தம்முடைய குருவைப் பிரார்த்தித்ததுமன்றி தாம் மௌனமாயிருக்கவேண்டிய தென்று விரதம் ஏற்படுத்திக்கொண்டு, அந்த விரதத்தை அந்த க்ஷணம் முதல் தம்முடைய ஜீவகாலம் முழுவதும் அனுஷ்டித்து வந்ததாகவும், இதற்குப் பிறகு, ஒரு தடவை கூட இவர் வாயைத் திறந்து பேசினதில்லை யென்றும், தமக்கு ஏதாவது அவசியம் வேண்டியிருந்தால் அப்படிப் பட்டஸமயங்களில் சமிக்ஞைகளாலாவது தரையிலெழுதியாவது தம்முடைய உட்கருத்தை வெளியிட்டு வந்ததாகவும் சொல்லப்பட்டு வருகிறது. ஜனங்களுக்கு, இவர் ஒரு பெரிய மஹாத்மா, ஸாமான்யமானவ ரில்லை யென்ற விஷயம் வெகுநாள்வரை தெரியாது. இவர் இல்லற வாழ்க்கையைத் துறந்தது முதல் ஜனங்களுக்கு ஹிதம்செய்யப் பாடுபட்டதாகவும், இவருடைய நடவடிக்கைகள் யாவற்றும் தேசாபிமானத்திலேயே ஏற்பட்டு வந்ததாகவும் புலப்படுகிறது. ஜாதி வித்தியாஸமே இவர் அனுஷ்டித்ததில்லை யென்றும், எந்த ஜாதியாரா யிருந்தாலும் அவர் வீட்டில் யாதொரு வித்தியாஸமும் பாராட்டாது எதைக் கொடுத்தாலும் சாப்பிட்டுக்கொண்டு வந்ததாகவும், என்றைக்கு அவருக்கு ஆகாரம்கிடைக்கவில்லையோ அன்று தெருக்களில் விழுந்து கிடக்கும் எச்சிற்கலைகளிலுள்ள சேஷங்களை வயிறு நிரம்பச் சாப்பிட்டு வந்ததாகவும் சொல்லப்படுகிறது. இவர் நாளுக்குநாள் காயக்கிலேசம் செய்து யோகாப்பியாஸத்தில் தீர முயன்று, அதில் அதி நுட்பமான இரஹஸ்யங்களைவெகு சீக்கிரத்தில் கிரகித்துக் கொண்டதாகவும், இவருடைய அபூர்வமான செயல்களைக் கேட்டு இவர் குருவே மிகுந்த ஆச்சர்ய மடைந்தாரென்றும், தமக்கு இவ்வளவு ஞானம் இன்னும் ஏற்படவில்லையே யென்று மிகவும் துக்கித்து வந்தாரென்றும் கேள்வி. இவர் ஒரு இடத்திலாவது அதிக நாள் தங்காமல் வெகு தூரம் யாத்திரை செய்து வந்ததாகவும், தூர தேசங்களில் நடந்துவரும் ஸங்கதிகளெல்லாவற்றையும் ஞானதிருஷ்டியால் பார்க்கும்படியான திறமை இவருக்கு இருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

நம்முடைய மஹாத்மா தமது வாழ்நாட்களின் பிற்காலத்தில் அவதூத ஸ்வாமிகளாக

இருந்தனராம். அவதூத மென்றால் பிறந்த மேனி, வஸ்திரம் தரித்துக்கொள்ளா திருத்தல். ஒரு ஸித்தர் இன்ன இன்ன விதமாக விருக்க வேண்டுமென்று பூர்வ கிரந்தங்களில் கூறப் பட்டிருக்கிறதோ, அவ்விதக் குணதிசயங்க ளெல்லாம் நம்முடைய ஸித்தரிடம் பொருந்தி யிருந்தனவாம். பிறந்தமேனிக் கிருத்தல் சாமா ன்பமான செயலன்று ஞானத்தேர்ச்சி மிகப் பெற்று, உலக சிந்தனையே யில்லாமல் மோக்ஷ ஸாதனத்துக்குரிய கருமங்களை அனுஷ்டித்து வரும் ஸாதுக்களுக்குத்தான் இப்பேரின்பம் கிடைக்குமே யொழிய மானிடஜன்மமெடுத்து ஸம்ஸார ஸாகரத்திலாழ்ந்து கஷ்ட நிஷ்டூரங் களை ஸதா அனுபவித்து வரும் நம்மைப் போன்றவர்களுக்கு இவ்வித ஸாம்பிராஜ்யம் கிடைப்பது துர்லபம். 'புனரபி ஜனனம், புனர பிமரணம்' ஸித்தமாய்க் கிடைக்குமேயொழிய இவ்விதப் பேரானந்தம் எப்படிக் கிடைக்கப் போகிறது?

நம்முடைய மஹாத்மாவினுடைய அற்புதச் செயல்களில் சில பின்வருமாறு:—

இவர் வாலிபத்திலிருந்த இடங்களை யெல் லாம் விட்டு விட்டு, கோயம்புத்தூர் ஜில்லா வில் அமராவதி, காவேரி, இந்நதிக்கரைகளில் தம்முடைய வாழ்நாட்களைக் கழித்ததாக அறி கிறோம். அனேகம் தடவைகளில் இவர் ஒரு உத்தேசமுமில்லாமல் உன்மத்தன் போல் தம் மைச்சுற்றி இன்ன ஸங்கதி நடக்கிறதென்று தாம் அறியாமலே தெய்வ சிந்தனையி லேயே இவரது மனம் ஆழ்ந்திருந்ததாகவும் அனேக நாட்களில் தோட்டம் துறவுகளிலும் நடுக்காடுகளிலும் ஆற்றோரங்களிலும் அலைந்து கொண்டு ஆற்றுமணல்களில் சிலவேளைகளில் படுத்துக்கிடந்ததாகவும் அறிகிறோம். இப்படித் திரியும் காலத்தில், திருச்சிராப்பள்ளி ஜில்லா வில் 'கொடுமுடி' என்ற கிராமத்தில் காவேரி மணல்களில் நம்முடைய உத்தமபுருஷர் உலக சிந்தனையற்று பிரம நிஷ்டையிலிருக்கையில், ஆற்றில் வெள்ளம் திடீரென்று வந்து இம்ம ஹாத்மாவை வெகுதூரம் அடித்துக்கொண்டு போய்விட்டதாகவும் ஆற்றங்கரைகளிலிருந்த கிராமவாஸிகள் இந்தத் துக்ககரமான காட் சியைக் கண்ணால் பார்த்து ஸகிக்க முடி யாமல் இச்சமயத்தில் யோகீச்வரருக்கு உதவிசெய்யத் தங்களால் முடியவில்லையே, என்செய்வோம், 'ஜகத்குரு' என்று துக்காக்கி ராந்தர்களாய்த்தங்கள் தங்கள் கிரஹத்துக்குச் சென்றனராம். இது நடந்து இரண்டு மூன்று மாதங்கள் கழித்துக் காவேரியில் வெள்ளம் தணிந்து ஜலம் குறைய, கிராமாதிகாரிகள் வழக்கப்பிரகாரம் குமபுகட்டுவதற்காக ஆற் றுக்குச் சென்றார்களாம். அப்பொழுது வேலை செய்கிறவர்களில் ஒருவர் தன் மண்வெட்டி யைக் கொண்டு மிகுந்த ஆழமாக ஆற்றில் வெட்ட அதன் வாயில் ஏதோ தட்டுப் பட்ட தாம். வேலைக்காரன் உடனே தன் மண்வெட்டி யை யெடுக்க, அதில் இரத்தக்குறிகள் சில விருப்பனவற்றைக் கண்ணுற்று ஆச்சர்யம டைந்து அங்குள்ளோரிடம் தெரிவிக்க, அனை வரும் ஒருங்குகூடி அந்த விடத்தைச் சுற்றி ஒரு பெரிய குழியை வெட்டிப் பரிசோதிக் கையில் அங்கிருந்த எல்லோரும் திகிலடையும் படி மணல்களில கைகால் முதலிய உறுப்புக் கள் மூலைக்கு ஒன்றாக ஆழப்புதைந்து இருந் தனவாம். பிறகு அவை அனைத்தும் ஒன்று சேர்ந்ததும் நம்முடைய மஹான் தமக்கு யா தொரு விதமான ஊறுபாடின்றி எழுந்து யாதொரு சமிக்ஞையும் செய்யாமல் தம் முடைய மார்க்கத்தில் சென்றனராம்.

திருச்சிராப்பள்ளி ஜில்லா கரூருக்குச் சமீ பத்தில், ஒரு கிராமத்தில் ஒரு கிருஷிகன் தன் வயலில் விளைந்த நெல்லை அறுத்துத் தூற்றி அறுவாக்கித் தன் களத்தில் குவித்துவிட்டு, பொழுது போய்விட்டதினால் மறுநாள் நெல்லை அளந்து கொள்ளலாமென்ற எண்ணத்துடன் குறிபோட்டுவிட்டுச் சிலரை காவல் வைத்துத் தன் வீடு போய்ச்சேர்ந்தானும். காவலாளர்கள் தங்கள் எஜமான் இட்டவேலையை ஜாக்ரதை யாய்ப்பார்த்துக்கொண்டிருக்கும் தருணத்தில், நடு இராத்திரில், நம்முடைய ஸ்வாமிகள் இந்த விடம் சென்று நெல் அம்பாரத்தில் சாய்ந்து படுத்திருக்கையில் காவலாளர்கள் இவரைக் கள்வரென்று அந்நியதாக்கிரகணம் செய்து அவரை அடித்துக்கட்டிவைக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் கைகளிலிருந்த தண்டங்களை உயர்த்தி இவர் ஸமீபத்தில் வந்ததும் அவர் கள் எல்லாரும் மயங்கி ஒங்கின பிரகாரம் மறு நாட்காலை வரை இவ்ரையே சூழ்ந்து நிற்க, மேற்கூறிய எஜமான் இவ்வற்புதத்தைக் கொ ஞ்ச தூரத்திலேயே தெரிந்து இது என்ன

வென்று காவலர்களை வினவ, அவர்கள் தாங்கள் நினைவோடிருந்தவரையில் நடந்ததைச் சொல்லலும், நம்முடைய மஹான் நிஷ்டையிலிருந்தெழுந்து மௌனமாய்ச் சென்றனராம்.

இப்படித் திரியுங்கால் திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு கிராமத்திற்கு நம்முடைய அவதூத ஸ்வாமிகள் போயிருந்ததாகவும், அப்பொழுது நாயக்கருடைய ஸேனைகளுக்குச் சாமான்கள் தயாரித்து அனுப்பும் ஸமயமாயிருந்ததால் இவருக்கும் ஒரு பழந்துணியை இடுப்பில் கட்டி இவரையும் மற்ற வேலையாட்களோடு விறகு சுமக்கும்படி அனுப்ப, எல்லாரும் சுமைகளை இறக்கினதும்நம்முடைய யோகீச்வரரும் தம் சுமையையும் கீழேபோட அங்கிருந்த விறகுகளெல்லாம் திடீரென்று நெருப்புப் பற்றிக்கொண்டு சாம்பலாய்ப்போய் விட்டனவாம்.

நம்முடைய ஸ்வாமிகள் திருச்செந்தூரில்சில நாள் வாஸம்செய்துவந்தனராம். அக்காலத்தில் வேளாள குலத்தில் பிறந்த ஒருசெல்வக்குமரி, கல்யாணமான ஐந்தாவது தினம் பெரிய மனுஷியாகி, (பிராரப்த கர்மத்தினால் அப்பெண்ணை பாம்புதீண்ட,) அவள் அகாலமரணமடைந்தனளாம். பிரபுவினுடைய மகளாகையால் இச் சமாசாரம் ஊரெங்கும் கூக்குரலாய்ப் பரவ, இந்தச்சப்தத்தைக்கேட்ட நம்முடைய ஞானேச்வரர் அந்த கிரஹத்துக்கு வந்து, சவத்தைத் தம்முடைய திருக்கைகளினால் தடவ, அந்தச் சவம் தூக்கத்திலிருந்து விழித்துக்கொள்வது போல் எழுந்திருந்து இம்மஹாத்மாவினுடைய பாதங்களில் வணங்கினதாகச் சொல்லப்படுகிறது.

இம்மஹான் சிலகாலம் இராமநாதபுரத்தில் ஜீவித்து வந்தனராம். அப்பொழுது ஒரு பிராமணன் குன்மவியாதியால் மிகுந்த கஷ்டப்பட்டு அதை நிவர்த்திக்க அவர் தம்மாலியன்ற மட்டில் மணி மந்திர ஔஷதங்களால் எவ்வளவோ பாடுபட்டும் ஒன்றினும் ஸௌகர்யமடையாமல் நம்முடைய மஹான் கால்களில் விழ, அவர் மிகப் பச்சாத்தாபப்பட்டு, பூமியில் மண்ணைக் கிள்ளி அப்பிராமணர்வாயில் போட உடனே இவர் சொஸ்தமடைந்து வெகுநாள் வாழ்ந்திருந்ததாகவும் அறிகிறோம்.

மேற்கூறிய விருத்தாந்தங்களால் நம்முடைய பெரியவர் மிகச்சிறந்தவரெனவும் பிறவி ஸித்தரென்றும் அறிந்துகொள்ளவேண்டியது. இவருக்குக் குழந்தைகளிடத்தில் மிகப் பிரியம். இவர் தமக்கு ஏதாவது தின்பண்டங்கள் கிடைத்தால், அவைகளைக் குழந்தைகளுக்குக் கொடுப்பதுவழக்கம். மதுராபுரியில் விருஷபோற்சவம் பிரபலமாக வருடந்தோறும் நடந்து வருகிறது. திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் கரூருக்கருகாமையிலுள்ள நெரூர் கிராமத்தில் சில குழந்தைகள் இவ்வுற்சவத்தைப் பார்க்கவேண்டுமென்று ஆசைகொண்டு நம்முடைய பரமாத்மாவைப் பார்த்து,'எங்களை இன்றிரவு மதுரையில் விருஷபோற்சவத்துக்குக் கூட்டிக்கொண்டு போகவேண்டு'மென்று வேடிக்கையாகப்பிரார்த்திக்க, அவர் இவர்கள்வேண்டுகோளுக்கிணங்கி, அவர்களைக்கூப்பிட்டுத் தம்முடைய தலை, முதுகு, தோள்கள் இன்னும் மற்ற அவயவங்களில் ஒவ்வொரு குழந்தையை ஏறும்படி செய்து கண்மூடித் திறப்பதற்கு முந்தி இவர்களனைவரும் மதுரையில் ரிஷபாரூடராயிருக்கின்ற பகவான் முன்பாகவிருப்பதைக் கண்டதும், குழந்தைகள் மிகச்சந்தோஷமடைந்ததாம். உத்ஸவகாலத்தில் குழந்தைகள் பிரியமாக உட்கொள்ளும் தித்திப்புத் தின்பண்டங்களை அவர்களுக்கு வேண்டியமட்டில் அளிக்க, குழந்தைகள் உத்ஸவத்தை மிகவும் குதூஹலமாகக்கொண்டாடினர்களாம். நம்முடைய பக்தர் இக்குழந்தைகளை முதலில் தூக்கிக்கொண்டுபோனபிரகாரம் அவரவர் வீட்டில் பொழுது விடிவதற்கு முன்னமே திரும்பக் கொண்டுவந்து விட்டனராம். பொழுது விடிந்ததும் ஒவ்வொரு குழந்தையும் அவரவர் பெற்றோர்களிடத்தில் முதல் நாள் இராத்திரி தாங்கள் மதுரையில் கண்ட திவ்ய காட்சியை மிகச்சந்தோஷமாயெடுத்துரைத்ததுடன் தாங்கள் தின்று தெவிட்டி மிகுதியிருந்த பக்ஷணங்களையும் காட்டியதாகவும் புலப்படுகிறது.

மஹா சிவராத்திரி, கோகுலாஷ்டமி முதலிய விசேஷ விரதாதி உத்ஸவ நாட்களில், இம் மஹானை அனேக விடங்களில் ஒரே காலத்தில் ஜனங்களில் அனேகர் இவருடைய பிரசம்லைகளைப் பார்த்ததாக நிச்சயமாய்க் கூறியிருக்கிறார்கள்.

(அடுத்த ஸஞ்சிகையில் முடிவு பெறும்.)

# தமிழ் வசன நூலாசிரியர்கள்

## TAMIL PROSE WRITERS

ஆதி காலம் (கி-பி. 200-ஆம் ஆண்டுக்குமுன்)

வசன நடை எனப்பேச்சுமுறையிற் சொல்வது "உரைநடை" எனத் தமிழ்நூல்களில் வழங்கும். உரைத்துப்போதலின்உரை;நடத்தலின் நடை. ஆக்குவோனுக்கு வருத்த மில்லாது பேசுவதுபோலவும், நடப்பது போலவும் எளிமையாக அமைந்து செல்லும் தன்மையது என்பது இச்சொற்களின் கருத்து. இவ்வுரை நடை பண்டைய தமிழ் நூல்களில் தொன்மை என்னும் நூல்வகைகளுட் காணப்படுகின்றது. தொன்மையாவது பாரதம் போன்ற பழைய கதைகளைச் செய்யுளோடு உரை நடையுங்கலந்துவரச் சொல்லும் நூல். அத்தகைய நூல்கள் பெருந்தேவனார் பாரதம், தகடூர் யாத்திரை போல்வன. சிலப்பதிகாரமும் உரையும் பாட்டும் கலந்துள்ள நூல்தான். அக்காலத்து உரை நடை இத்தன்மைத்து என்பதைச் சிலப்பதிகாரத்தில் உரைபெறுகட்டுரையில் உள்ள பின் வரும் வாக்கியம் காட்டும்:—

அதுகேட்டுக் கொங்கிளங் கோசர் தங்கணாட்டகத்து,
நங்கைச்கு விழவொடு சாந்தி செய்ய,
மழைதொழி லென்றும் மாறாதாயிற்று.

மத்தியகாலம்(முற்பகுதி கி-பி 200-ம்வரு முதல் கி-பி. 600-ம்வரு வரை.)

2. இக்காலத்துத்தான் சைன நூல்கள் தழைத்தன. சைன நூலாசிரியர்கள் வடமொழியும் கற்றவராய் அம்மொழியைத் தென்மொழியோடு பெரிதுங் கலக்கலாயினர். அவர்கள் இயற்றின வசன நூல்கள் மணிப்ரவாளநடை என வழங்கும் நடையைக்கொண்டது. ஸ்ரீபுராணம், கத்திய சிந்தாமணி என்னும் நூல்கள் இந்நடையில் எழுதப்பட்டவை. இந் நடையின் தன்மை இவ்வகைய தென்பதைக் கீழ்க் காட்டும் உதாரணத்தால் அறியலாகும்:—

"சிரேணிக மகாராஜன் * * அசோக விருக்ஷ மூலத்து ரூப யௌவன சுபலக்ஷண ஸஹிதராகித் த்யாநாரூடராகி யிருந்த ஜீவந்தர முனிகளைக் கண்டு அத்தியந்தம் விஸ்மிதனாகி சுதரும கணதரரை யடைந்து, 'பகவானே! ஈதிருச லக்ஷண சகிதராகிய இத்தபோதனர் யார்?' என்று வினவ அவரும் அருளிச்செய்வார்."

மத்தியகாலம் (பிற்பகுதி கி-பி-600-ம் வரு முதல் 1500வரு வரை.)

3. இக்காலம் வெகு விசேடமானது. இக்காலத்திற்றான் சைவ வைணவ ஆசிரியர்கள் ஏற்பட்டனர். அவர்தம் அரிய நூல்களும் செயல்களும் வெளிவந்தன; கச்சியப்பர் கந்த புராணம் பாடினர்; கம்பர் இராமாயணம் இயற்றினர்; சேக்கிழார் பெரியபுராணஞ்செய்தனர்; சங்க நூல்களைப் பொங்கும் ஆசையிற் படித்து ஆராய்ந்து உரையெழுதினர் நச்சினார்க்கினியர்; சிலப்பதிகாரத்து உலப்பிலா உரையைத் தந்தனர் அடியார்க்குநல்லார்; திருக்குறளின் கருத்ததனைப் புலப்படுத்தினர் பரிமேலழகர். உரையாசிரியர்கள் எழுதின உரைதவிர வேறு உரைநடையைக் கொண்ட நூல்கள் இக்காலத்து இல. உரையாசிரியர்களுள் இளம்பூரணர் முதலாவார். அவர் தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலுக்கு உரையெழுதிப் பெயர் பெற்றவர். இவரை "உரையாசிரியர்" என்றே அக்காலத்தும் கூறினர். அடியார்க்குநல்லார் "உரையாசிரியராகிய இளம் பூரண அடிகள்" என்றார். இவருக்கு வடமொழிப் பயிற்சி இல்லை. சிவஞான யோகிகள் இவரைத் "தமிழ் நூலொன்றே வல்ல உரையாசிரியர்" என்றார். தொல்காப்பியத்துக்கு உரை யெழுதினோர் ஐவர். அவருள் கல்லாடர் என்பவர் ஒருவர்; அவர் உரை இப்போது கிடைத்திலது; பேராசிரியர் என்பவரும் ஒரு தொல்காப்பிய உரை ஆசிரியர். இவர் திருக்கோவையார், குறுந்தொகை முதலிய நூல்களுக்கு உரை கண்டவர். இவர் செவ்விய செந்தமிழ் நடை எழுத வல்லவர். இவர் நடையின் தன்மை பின் வருமாறு:—

"நீ பூக் கொய்யச் சிறிது புடை பெயர்ந்தாய்; அந்நிலைமைக்கட் கீழ்காற்று மிகுதலாற் கரைமே லேறுங்கடல் மேல் வந்துற்றது. உற, யான் தோழியோ! தோழியோ! என்று நின்னைவிளித்தேன்; அது கண்டிரங்கி அவனருளொடு வந்து தன் கையைத் தந்தான்; யானு மயக்கத்தாலே அத்தனை நின்கை யென்று தொட்டேன்."

சேனாவரையர் என்பவரும் தொல்காப்பிய

உரையாசிரியர். இவர் வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்தவர். இவர் உரைநடைக்கு உதாரணம் "யானை நூல் வல்லா னொருவன் காட்டுட் போவுழி ஓர் யானை யடிச்சுவடு கண்டு இஃதரசுவா வாதற் கேற்ற இலக்கண முரைத்து என்ற வழி * *"

நச்சினார்க்கினியர் என்னும் பெரியவரும் ஒரு தொல்காப்பிய உரையாசிரியர். மஹாபண்டிதர். கல்விக் கடலைக் கடந்தவரென்றே சொல்லலாம். தொல்காப்பியம், கலித்தொகை, பத்துப்பாட்டு, சிந்தாமணி, குறுந்தொகை (20 செய்யுள்) என்னும் நூல்களுக்கு அருமையான உரை எழுதியுள்ளார். இவர் உரைநடை தெள்ளியதும், தூயதும், ஓடுந்தன்மை அமைந்துள்ளதுமானது. இவரது நடையின் பெருமை பின்வரும் செய்யுளுக்கு அவர் எழுதியுள்ள உரையால் விளங்கும்:—

செய்யுள்

கரும்பே தேனே அமிர்தே காமர் மணியாழே
அரும்பார் மலர்மேல் அணங்கே மழலை யன்னம்மே
சுரும்பார் சோலை மயிலே குயிலே சுடர்வீசும்
பெரும்பூண் மன்னன் பாவாய் பூவாய் பிணைமானே.

உரை

கணவற்கு மெய்ம் முழுதும் இனிதாயிருத்தலிற் கரும்பு. நல்லார் உறுப்பெல்லாங் கொண்டு இயற்றலிற் றேன். இவ்வுலகிலில்லாத மிக்க சுவையும் உறுதியுங் கொடுத்தலின் அமிர்து. காம வேட்கையை விளைவித்து இனிய பண் தோற்றலின் மழலையை யுடையதோர் யாழ். கணவற்குச் செல்வத்தைக் கொடுத்தலிற் றிரு. நடையா லன்னம். சாயலான் மயில். காலமன்றியுங் கேட்டோர்க்கு இன்பஞ் செய்தலின் குயில். மன்னன் மகளே யென்றல் புகழன்மையின், மன்னன் பாவாய் என்றது அவன் கண்மணிப் பாவை யென்ப துணர்த்திற்று; இனியிவள் கொல்லிப்பாவை யன்று, மன்னன் பாவை யென்றுமாம். சேடியர் கற்பித்த கட்டளை தப்பாமற் கூறலிற் பூவை. நோக்கத்தான் மான்.

பரிமேலழகர் உரைநடை சிற்சில இடத்துச் செய்புள்போல அமைந்துளது. உதாரணம்:— "இந்திரன் முதலிய இறையவர் பதங்களும், அந்தமிலின்பத் தழிவில் வீடும்..."

"வீடென்பது, சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்து."

வீரசோழிய உரையாசிரியராகிய பெருந்தேவனாரும் சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லாரும் இக்காலத்தவர். அடியார்க்கு நல்லார் நடையும் சிற்சில இடத்துச் செய்யுள்போல அமைந்தொழுகும் தன்மையதாயிருக்கின்றது.

நிகழுங்காலம்

(கி-பி 1500-ம் வரு முதல் இன்றளவும்)

4. இக்காலத்திற்றான் சைவ சித்தாந்த சாஸ்திர நூல்கள் எழுதப்பட்டன. தனி வசன நூல்கள் தலையெடுக்கத் தொடங்கின.

(1) நிரம்ப அழகிய தேசிகர்—இவர் உமாபதி சிவம் திருவாய் மலர்ந்த திருவருட் பயனுக்கு உரை செய்தவர். இவர் நடை தெள்ளியது.

(2) ராபர்ட் டி நொபிலியஸ் (தத்வபோதக சுவாமி) இவர் 17-ஆம் நூற்றாண்டின் மத்தியில் இருந்தவர். கிறித்தவ நூலாசிரியர். இவர் நடை இலக்கணம் பிறழாதுளது என்பர்.

(1680-1700) பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்த உரையாசிரியர்கள்:—

(1) மயிலேறும் பெருமாள் பிள்ளை—கல்லாட உரையாசிரியர்.

(2) திருவாரூர் வைத்தியநாத தேசிகர்—இலக்கணவிளக்கம் என்னும் நூல் எழுதினவர்.

(3) பிரயோக விவேகம் என்னும் நூல் எழுதின குருகூர் சுப்பிரமணிய தீக்ஷிதர்.

(4) இலக்கணக் கொத்து எழுதின ஈசான தேசிகர்.

(5) பவணந்தியார் நன்னூலுக்கு உரையெழுதின சங்கர நமசிவாயப் புலவர்.

இவர்களது உரை நடைகளெல்லாம் சிறந்த செந்தமிழ் நடையைக் கொண்டன. ஓர் உதாரணம் காட்டுவாம்:—

"மன மொழி மெய்களின் வணங்குது
மகிழ்ந்தே என்பவாகலின் மனத்தாற்
றுணிவு தோன்ற நினைத்தலும், மொழியாற்
பணிவு தோன்ற வாழ்த்தலும், தலையாற்
றணிவு தோன்ற இறைஞ்சலும் அடங்கப்
பொதுப்பட "வணங்கி" என்றாம்."

பதினெட்டாம் நூற்றாண்டில் (கி.பி. 1740) கான்ஸ்டான்டியஸ் பெஸ்கி என்னும் மேனாட்

டுப் புலவர் ஒருவர் தமிழ்கற்று வீரமாமுனிவர் என்னும் பெயரோடு விளங்கலாயினர். 1727-ஆண்டில் வேதியர் ஒழுக்கம் அல்லது உபதேச ரத்நாகரம் என்னும் வசன நூலை இயற்றினர். டாக்டர் போப்துரை இந்நூலின் வசனநடையை மிக வியந்து எழுதியுள்ளார். வேதவிளக்கம், தேம்பாவணி உரை, ஞான உணர்த்தல், அவிவேக பூரண குருகதை முதலிய நூல்களும் இவர் எழுதினவாம்; அவிவேக பூரண குருகதை யென்பது வெகு வேடிக்கையான சிறு கதைகளின் தொகுதி. எளிய நடையில் பெண்பாலரும் படிக்கத்தக்க தாயிருக்கிறது.

சிவஞான சுவாமிகள்—இவர் 18-ஆம் நூற்றாண்டின் ஈற்றில் இருந்தவர். "பெருந்தமிழ்ப் புலவர்" என்றால் இவர்க்கே தகும். வடமொழி தென்மொழி இரண்டும் வல்லவர். செய்யுள் யாப்பதிலும் பெரியோர். உரையெழுதுவதிலும் நிபுணர். நூலாராய்ச்சியிலுஞ் சிறந்தவர். தத்துவ நூலை மெத்தவுங் கற்றவர். தணிகைப் புராணம் பாடிய கச்சியப்பர் முதலான பன்னிரு மாணுக்கர்களுக்கு பாடஞ் சொன்ன மஹா பண்டிதர். இவர் வசன நடை மிக்க கம்பீரமுள்ளது. உதாரணம்:—

"ரூபகப்பிரயோசனமுள்ள பதாந்நுவய மில்லாத இடத்து ரூபகஞ் செய்தல் பொருந்தா தென்பதறிய கில்லீர். அலங்கார சாஸ்திரம் படித்தறிந்தீராயின், இவ்வாறு ரூபகத்திற்கும் ஆகுபெயர்க்கும் பேதந் தெரியாமற் சொல்லியிழுக்குறீர்."

சோக்கப்ப நாவலர். இவர் தஞ்சைவாணன் கோவை உரையாசிரியர். இவர் நடை மிகத் தெளிவுள்ளது.

இனி பத்தொன்பதாம் நூற்றாண்டிற்றமிழ் வசன நூலாசிரியர் இன்னோர் என்பதைக் குறித்தெழுதுவாம்.

வ. சு. சேங்கல்வராயன், எம்., ஏ.

---

தண்ணீர் குடித்தல்.—நம்தேசத்து ஜனங்கள் சாதாரணமாய் சாப்பிடும்போது தண்ணீர் அருந்துவது வழக்கம். ஆனல் கல்வி கற்ற சிலர் இக்காலத்தில் சாப்பிடும்போது தண்ணீர் அருந்துவது தப்பென்று போதிக்கப்பட்டு சாப்பிட்ட பிற்பாடு தண்ணீர் சாப்பிட்டு வருகிறார்கள். ஆனல் சாப்பிடும் போது கொஞ்சபாகம் தண்ணீர் அருந்துவதே ஜீரணத்துக்குச் சிரேஷ்டமென்று தெரியவருகிறது.

## நல்ல விதையை விதைப்பதினல் உண்டாகும் அனுகூலங்கள்

## ADVANTAGES OF SOWING GOOD SEEDS

பயிர்கள் விளைவதற்கு நிலமே முக்கியமான தென்றும், நிலம் நல்லதாயில்லாவிட்டால் நல்ல மாசூல் கிடைக்கா தென்றும், நிலம் நல்லதாயிருக்குமானல், விதை நல்லதா கெட்டதா வென்று அவ்வளவு யோசிக்க வேண்டியதில்லை, கொஞ்சம் மட்டமாயிருந்தாலும்நன்றாய் விளையுமென்றும் அனேகமாய் நினைப்பதுண்டு.

நிலம் நல்லதாயிருந்தால் விளைச்சல் திறமாயிருக்கும் என்று சொல்லுவது உண்மைதான். ஆனல் நல்ல நிலத்தைத் தன் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு விதையின் தன்மையைக் குறித்துச்சிறிதும் கவனிக்காதவனை விட நல்ல நிலத்தில், விதையைப் பொறுக்கி எப்போதும் நல்ல விதையையே விதைப்பவன் அதிகபலனை யடைவான் என்பதும் நிஜமே.

நல்ல விதையென்பது கீழ்க்குறித்த விவரங்களின் வகைகளில் இரண்டிலுமாவது அல்லது ஏதாவ தொன்றிலாவது பொருந்தி யிருக்கும்.

ஒரு பிடி விதையில் ஒவ்வொரு விதையும் நல்லதாயும் நன்றாய் விளைந்ததாயும் பருத்து, உமி (அல்லதுதோல்) பெருத்து, அரிசி (அல்லது பருப்பு) சிறுத்து இராமல் பால்நிறைந்து, முத்தி சேதையில்லாமல் முளைக்கும்.

விதையெல்லாம் ஒரே ராசியாய் ஓங்கிவளர்ந்து நோயை லட்சியம் பண்ணுமல் பூச்சியடித்தாலும் கெடாமல் நல்லராசி காணுவது.

முன் சொன்ன குணங்கள் எல்லாம் இருந்து அந்த விதையை விதைத்தால் முன்பின்னுய் முளையாமல் ஒரே விதமாய் முளைத்து சிலது மெலிந்து சிலது பெருக்காமல் ஏகதேசமாய் வளர்ந்து நல்ல மாசூலைக் கொடுக்கும். அதனல், உழவு, எருவு, மழை, நீர்க்கட்டு, வெயில், காற்று, வேலை முதலியவைகள் ஒரே மாதிரியான போது, பஞ்சை விதையை நிலத்தில் அதிகமாய்க் கொட்டுவதை விட நல்ல விதையைக் குறைத்து விதைத்தால் போதும். இந்த ராஜதானியின் அனேகபாகங்களில், நெல், பருத்தி விதைப்பில் அதிக விதையை விதைக்கிறார்கள். அப்படி யதிக விதை விதைப்பதற்கு பல காரணங்கள் உண்டு. அவற்றில் ஒன்று பின் சொல்லியது. ஒரு பிடிவிதை எடுத்துப் பார்த்

தால், அதில் நொறுங்கிப் போயும் நன்றுய் முற்றுததும், முளைக்கமாட்டாததாயும், ஏதோ முளைத்தாலும் நன்றுய் வளர்ந்து பலனைக் கொடுக்கமாட்டாததாயும் உள்ள விதைகள் அனேகம் இருக்கும்.

முன் சொன்ன நல்லகுணங்களோடு, இரண்டாவது வகையென்று விவரித்த குணங்களும் உண்டானல், அந்த விதைகளை விதைத்தால் நல்ல மாசூலடைய அதிக ஏதுவுண்டு. இந்த ராஜதானியில் விதைக்கிற ஒவ்வொரு வகை விதையிலும் அனேக தினுசுகள் கலந்திருக்கும். கடப்பை, கர்நூல், பல்லாரி, அனந்தபூர் ஜில்லாக்களில் கரிசல் காட்டில் போடுகிற பருத்தி வெண்பஞ்சையும் செம்பஞ்சையும்கொடுக்கிறது விதைகளின் கலப்புதான். செம்பஞ்சு தினுசு இந்த கரிசல் நிலங்களில் ஒங்கிவளராது. அதிக பருத்தி வெடிக்காது. அதனுல், இந்த செம்பஞ்சு விதை கலந்த விதையை விதைத்தால், வெண்பஞ்சை மாத்திரம் கலப்பில்லாமல் போட்ட காட்டிலிருந்து வருகிற பருத்தியை விட மாசூல் குறைந்து போகும். இதுவுமல்லாமல், இந்த இரண்டுவித பஞ்சு தினுசுகளின் இழை நாண்ணியமும் வேறு. நாண்ணியத்தை உத்தேசித்து விலையும் மாறும். கலந்த பஞ்சைவிட கலப்பில்லாத வெண்பஞ்சு தினுசுக்கு விலை கூட்டிக்கொடுப்பார்கள். பருத்தியைப் போல் நெல்லிலும், மிளகாயிலும் விதைகள் கலந்தேயிருக்கும். மிளகாய் நட்டிருக்கிற ஒரு தோட்டத்திலேயோ அல்லது காட்டிலேயோ போய்ப்பார்த்தால் பத்துப் பன்னிரண்டு தினுசுகள் வரையில் பொறுக்கலாம். சில செடிகள் நன்றுய்க்காய்க்கிற தினுசுகள் அல்லாததினுல், மாசூல் நன்றுய்க் காய்க்கிற தினுசைமாத்திரமேதனியே நட்டபோது வருகிறதளவு வராது.

ஒவ்வொரு குடியானவனும் மேற்சொன்ன காரணங்களினுல் நல்ல விதையையே விதைக்க வேணும். தான் விதைகட்டாமல் அயலாரிடத்தில் வாங்கவேண்டிவந்தால் நன்றுய் முற்றுததும் நொறுங்கிப்போயுமுள்ள விதையைவாங்கப்படாது. தனக்கு சொந்த விதையிருந்தால், அதை நன்றுய் வளர்ந்த செடிகளிலிருந்து பொறுக்கி கருக்காய் பதர் இல்லாமல் ஜாக்கிரதையாய்வைக்கவேண்டும். இப்படிப்பண்ணினுல் ஒருவன் விதையிலும் செட்டுப்பிடிக்கலாம்.

யும் அதிகமாய்க் காணும்.

# பவளமும் பவளக்கொடியும்

## CORALS AND CORAL-REEFS

முத்தைப்போல் பவளமும் கடலில் வசிக்கும் ஒரு சிறு பிராணியால் உண்டாக்கப்படுகின்றது. நத்தை என்னும் ஜந்துவில் ஏற்படும் அசாதாரணக் காரணங்கள் சிலவற்றுல் முத்து உண்டாகின்றதென்று, முன் அவ்விஷயத்தைக் குறித்து எழுதப்பட்டதிலிருந்து தெளியக் கூடும். ஆனுல், பவளம் என்பதோ பவளப்பூச்சியின் முக்கிய அங்கங்களில் ஒன்றுயிருப்பதுடன், அப்பூச்சியை அதன் எதிரிகளினின்றும், மற்றப்படி கடலடியில் உண்டாகக்கூடிய சுழல்கள் முதலான அபாயங்களினின்றும், வெகு சாவதானமாய்க் காப்பாற்றுகின்றது. ஜீவப்பிராணிகள் பெரும்பாலனபோல், பவளப்பூச்சி தன்னிடம்விட்டு நகரக்கூடியதன்று; செடிகளைப்போல் அதுவும் ஒரே இடத்தில் ஊன்றியிருக்கும். கடலடியில் இருக்கும் பாறைகளின் மீதிலாவது வேறு பொருள்களின் மீதிலாவது கொடிபோற் படரும். செடிகளைப்போலவே அதுவும் கிளைகள் விட்டுப் படிப்படியாய் வளரும். செடிவர்க்கத்தில் ஒரே இடத்தில் ஊன்றப்பெருது தாமே நடந்து செல்லும் செடிகள் சில இருப்பனபோல், தாமே நகர்ந்துசெல்லும் ஜீவஜந்துக்கள் வர்க்கத்தில் பவளப்பூச்சி ஊன்றப்பெற்றிருக்கும் பெருமையுடைத்தாம். இக்காரணம் பற்றியே இதைக் கடலிலுண்டாகும் ஒருவகைச் செடியென்றுகொண்டு மருள்வாரும் உண்டு. பவளப்பூச்சியைப்போலவேதாமே நகரக்கூடிய சக்தியிழந்த வேருெரு வகுப்புப் பிராணியும் உண்டு. அதனை ஆங்கிலத்தில் ''ஸ்பஞ்ச்' (Sponge) என்று சொல்வார்கள். பவளப்பூச்சி செடிகளில் சேர்ந்ததன்று, பிராணிகளுள் சேர்ந்தது தான் என்று கொள்வதற்கு அதன் அங்கத்தின் கூறுபாட்டைப்பற்றி சில சொல்ல விளங்கும்.

இவ்வுலகத்து வசிக்கும் பிராணிகளை அவற்றின் அங்கக் கூறுபாட்டிற்குத் தக்கவாறு உயர்ந்தனவென்றும், தாழ்ந்தனவென்றும் உயிர் நூல்வல்லார் வகுத்திருக்கின்றனர். மீன், தவளை, பல்லி, பறவை, மிருகம் முதலியன உயர்வகுப்பின வென்றும், புழு, நண்டு, ஈ, எறும்பு, நத்தை முதலியன தாழ்ந்த வகுப்பின வென்

றும் சொல்வார்கள். அத்தாழ்ந்த வகுப்பில், மிகத்தாழ்ந்த பிராணிகளுள் ஒன்று இப்பவளப்பூச்சியே. அவை பல கூடி, ஒன்றாய் வசிக்கும். அத்தகைய கூட்டத்திற்கு 'பவளப்பூச்சிக் குழாம்' (Colony) என்று சொல்லலாம். அக்கூட்டத்தினின்று ஒன்றை விலக்கி அதன் அங்கக் கூறுபாட்டை ஆராய்ந்து பார்த்தால் பூச்சி முழுவதும் வாய், வாயைச்சுற்றி அமைக்கப்பெற்றிருக்கும் உணர்ச்சிக் கொம்புகள், இரைப்பை, அண்டகோசம், மணிக்குடல், இவையனைத்தையும் தன்னுள்ளடக்கிக் காக்கும் எலும்புக் கூடு என்று ஏற்படும். கண், மூக்கு, காது, கை,கால், இருதயம், சுவாசப்பை என்ற வேறுவிதமான அங்கக் கூறுபாடுகள் ஒன்றும் இராது. அதன் அவயவங்களின் அமைப்பைக் காட்டும்பொருட்டுப் பூச்சியொன்றை நீளப்பாடாய் வெட்டின தோற்றம் படம்1-ல் காட்டியிருக்கிறது. அதில் கறுப்பு நிறமிட்டிருக்கும் பாகமே பூச்சியின் எலும்புக்கூடாம். வேறு பிராணிகளினாலாவது அல்லது வேறு

படம். 1.




1 வாய்,
2 இரைப்பை
3 எலும்பு
4 அண்டகோசம்
5 பவளப் பூச்சி ஒட்டிக் கொண்டு வளரும் கற்பாரை.
6 மணிக்குடல்(Mesentery)
7 உணர்ச்சிக் கொம்புகள்.

எந்தவிதத்தினாலாவது பவளப்பூச்சிக்குத் தொந்தரவு உண்டானால் அது தன் உணர்ச்சிக் கொம்புகளை உடனே உள்ளிழுத்துக்கொண்டு எலும்புக்கூட்டுக்குள் சுருங்கிக்கொள்ளும், எலும்புக்கூடு மிகவும் கெட்டியானதால் பவளப் பூச்சிக்கு யாதொரு தீங்கும் நேரிடாது.

எலும்புக்கூட்டின் குறுக்குவெட்டு ஒன்றை படம் 2-ல் காட்டியிருக்கிறது. அதிலிருந்து அக்கூடு எங்ஙனம் பூச்சியைச் சுற்றிக்கொண்டிருக்கின்றது என்பது நன்கு விளங்கும். எலும்புக்கூடு என்றதினாலேயே, அது பறவை, மிருகம் இவற்றின் எலும்பு போன்றதன்று. எந்தப் பிராணியிலாவது ஒருகெட்டியான பாகமிருந்து, அதைத் தசைபோன்ற மெதுவான பாகங்கள் பற்றிப் பிடித்துக் கொண்டிருக்குமா

படம். 2.




1 எலும்புக்கூடு

2 எலும்புக் கூட்டை அறைகளாக வகுக்கும் பிரிவுகள்.

யின் அக்கெட்டியான பாகத்தைச் சாதாரணமாய் "எலும்பே"ன்று (skeleton) உயிர் நூலார் சொல்வது வழக்கம். அவ்வழக்கம் பற்றியே பவளப்பூச்சியின் மெதுவான பாகங்கள் கூட்டைப்பற்றி பிடித்திருப்பதும் தவிர, அக்கூடே மெதுவான பாகங்களைக் காப்பாற்றுவதினால் அதையும் "எலும்புக்கூடு" என்று சொல்வது பொருந்தும். அக்கூடு சிமைச் சுண்ணாம்பாலானது. பூச்சியின் மேற்றோலினால் சிறிது சிறிதாய் ஆக்கப்பட்டது. அக்கூடே கெட்டியாயும் பருமனாயு மிருக்குமாயின் பவளமென்றும், பலகூடு ஒன்று சேர்ந்தது, பவளக் கொடியென்றும் சொல்வார்கள்.

அத்தகைய கொடியொன்றின் உருவம் படம் 3-ல் காட்டப்பட்டிருக்கிறது. ஒன்றன்



படம். 3.

பவளக் கொடி(எலும்பு மட்டும்)

மேலொன்றாய்க் கொடிபோல் வளராமல் பவளப் பூச்சிகள் ஒரே பரப்பாக மிகுதியாய் வளர்ந்து, அங்ஙனம் வளர்வதினால் பூச்சிகளின் எலும்புக்கூடுகள் பல ஒன்றாய்ச் சேர்ந்து பவளக் கட்டிகளாகவும், பவளத்தீவுகளாகவும் மாறுவதும் உண்டு. அவ்விதம் உண்டான பவளத்தீவுகள் சிலவற்றை இராமேச்வரத்துக்கு அருகாமையிலுள்ள கடலில் பார்க்கலாம். இன்

னும் அவை மிகுதியாய் மத்திய பஸிபிக் மஹா ஸமுத்திரம், (Central Pacific Ocean) பெர்ஷியக்குடாக்கடல் (Persian Gulf) பனமாகுடாக் கடல் (Gulf of Panama) செங்கடல் (Red Sea) இவற்றிலும். ஜான்ஜிபார் (Zanzibar) மடகாஸ்கர் (Madagascar) மொரிஷஸ் (Mauritius) ப்ரஸீல் (Brazil) இவற்றினருகாமையிலும் மேல் இந்திய தீவுகளைச் (West Indies) சுற்றியும் வளர்கின்றன. தீவுகளாக வளருவதல்லாமல், நடுவில் குளம்போல் ஜலம் தேங்க, அதைச் சுற்றிலும் கரைகட்டினது போல பவளக்கொடி படர்ந்து நிற்கும். அக்கரையின்மேல் தென்னை முதலிய மரங்கள் வளர்ந்து அதை அழகு பெறச் செய்யும். அவற்றிற்கு ஆங்கிலத்தில் அட்டால்ஸ் (Atolls) என்று பெயர்.

கொடியாயினும் கட்டியாயினும் பவளம், சுண்ணம்பு செய்வதற்குத்தான் ஸாதாரணமாய்ப் பயன்படுகிறது. அவற்றுள் ஒருவகை மட்டுமே அதன் நிறத்தினால் மிக விலையுயர்ந்த நவமணிகளுள் ஒன்றாக மதிக்கப்பட்டு வருகின்றது. அது சிவப்பு நிறங்கொண்டதென்று யாவரு மறிவர். அது மத்தியதரைக் கடலில் (Mediterranean Sea) மாத்திரமே உண்டாகின்றது. அங்கிருந்து எடுக்கப்பட்டுத்தான் வேறு தேசங்களுக்கு ஏற்றுமதியாகின்றது.

செம்பவளம் ஸாதாரணமாய் மிக ஆழமான இடங்களில் வளர்வதில்லை. எண்பது "பாகம்" (Fathom) ஆழமுள்ள இடங்களில் வெகு நன்றாய் வளரும். அது த்யூனிஸ் (Tunis) அல்ஜீரியா (Algeria) மொராக்கோ (Morocco) என்னும் தேசங்களினோரமாயுள்ள மத்திய தரைக் கடலில் மிகுதியாய் உண்டாகின்றது. நேப்பில்ஸ் (Naples) லெக்கார்ன் (Leghorn) ஜினேவா (Genoa) என்னும் பட்டணங்களுக்குச் சமீபத்திலும், சர்தீனியா (Sardinia கார்ஸிகா (Corsica) காடலோனியா (Catalonia) ப்ராவென்ஸ் (Provence) என்னும் தேசங்களின் கரையோரத்திலும் அகப்படும்.

ஏறக்குறைய 2,000 வருஷங்களாகத்தான் மத்தியதரைக் கடல் தேசங்களுக்கும் நம் தேசத்திற்கும் அதிகமான செம்பவள வியாபாரம் நடந்து வருகின்றது. அதற்கு முன், கால்ஸ் (Gauls) என்பவர்கள் தமது யுத்தக் கருவிகளிலும் தலைப்பாகைகளிலும் அலங்காரமாகத் தரிப்பதற்கும் ரோமன்ஸ் (Romans) என்னும் ஜாதியார் தமது குழந்தைகள் அபாயத்துக்குள்ளாகாமலிருக்கும்பொருட்டு செம்பவளத்தை அவற்றின் கழுத்தில் கட்டியு முபயோகப்படுத்தி வந்தார்களாம். இக்காலத்தும் இத்தாலியா (Italy) தேசத்துப்பெண்கள், திருஷ்டிதோஷம் படாமலிருக்கும்பொருட்டும் மலட்டுத்தனத்தைப் போக்கும்பொருட்டும் செம்பவளத் துண்டுகளை அணிவது வழக்கமாம். ஸாதாரணமாய் வியாபாரத்துக்கு வரும் பவளம் சிவந்ததானாலும் வேறுநிறங்கொண்டிருப்பது முண்டு. ஆனால் அத்தகைய பவளங்கள் மிக அருமையாய்க் கிடைக்கும். இளஞ்சிவப்பும் ரோஜாநிறமும் கலந்ததே பவளங்களுக்கெல்லாம் சிறந்தது. விலையிலும் மிக வுயர்ந்தது.

சென்ற நூற்றாண்டு ஆரம்பமுதல், மத்தியதரைக் கடலில் பவளங்குளிக்க உத்திரவு கொடுக்கும் பாத்தியதை பிராஞ்சுக்காருடையதாய் இருந்துவருகிறது. அப்பாத்தியதை அவர்களுடையதானாலும், கடலில் சென்று பவளம் குளிப்பதும், அதைக் கடலிலிருந்து சேகரித்து, வெட்டித்தேய்த்து, உருவாக்கி வியாபாரத்துக்குத்தக்கதாய்ச்செய்யும் கைத்தொழிலும், இத்தாலியா தேசத்தில் முக்கியமாய் நேபில்ஸ், ரோம், ஜினேவா என்னும் நகரத்தாரே செய்து வருகிறார்கள். வருஷாவருஷம் மத்தியதரைக் கடலில் பவளங்குளித்தல் நடந்து வந்தாலும் எடுக்கப்பட்ட பவளம் எவ்வளவென்றும் என்னவிலை கொண்டதென்றும் சொல்லத்தக்க கணக்கு அகப்படுவதில்லை. 1873-ம்வருஷம் மட்டும் அல்ஜீரியா தேசத்துக்கடுத்த கடலில் பவளங் குளித்தபோது, 311 கப்பல்களும் 3150 பேர்களும் வேலை செய்ததாகவும், மொத்தம் 1,13,000 பவுன் விலைகொண்ட செம்பவளம் எடுத்ததாகவும் தெரிகிறது.

செம்பவளம் இந்தியாவிலும் சீனாவிலும், அதிகமாய் விலையாகிறது. நந்தேசத்தில் எதற்காக வாங்குகிறார்களென்பது நாமெல்லோரும் அறிந்த விஷயம். தற்காலம் அதன் விலையும் மிக வுயர்ந்திருக்கின்றது. சீனாவில் சர்க்கார் மேலுத்தியோகஸ்தர்கள் அணியும் உடுப்புக்குச் செம்பவளத்தால் செய்த பொத்தான்களை உபயோகப்படுத்த வேண்டுமாம்; அவை அவர்கள் உத்தியோகத்தைக் குறிப்பிடும் சின்னங்களிலொன்றாம்.

**வி. நரஸிம்மய்யங்கார், எம். ஏ., பி. எல்**

# சென்னையில் பால் ஸப்ளை

## MILK SUPPLY IN MADRAS

பால் பொதுவாய், உலக முழுவதும், விசேஷமாய் இந்தியாவிலும், முக்கியமான போஜன பதார்த்தமாய் விளங்குகிறது. ஆஹார பதார்த்தங்களுக்கின்றியமையாத ஸகலஸத்துக்களும் பாலில் குறைவின்றி, ஏற்பட்ட அளவில் இருக்கின்றன. மேலும் பாலிலிருந்து மேற்படி ஸத்துக்களில் எதையும் குறைத்து விடுவோமானல் அதைச்சாப்பிடுபவர் சரீர ஆரோக்யத்தின் குறைவிற்கு அது காரணமாகிறது, அன்றியும், பாலின் அமைப்பாதி, ரஸாயந சாஸ்திர ஆராய்ச்சியால் அறியக்கூடிய, குணகுணங்களைப் பரிசிலனை செய்திருப்பவர்கள், இதர ஆஹாரங்களைக் காட்டிலும், பாலிற்கு, குழந்தைகளின் அரோக திட சரீர வளர்ச்சி விஷயமாய், விசேஷ குணங்களுண்டென்று கூறுகின்றனர். இந்தியாவில் ஸமீப காலத்திற்குள் ஜனத்தொகை ஜடிதியில் விருத்தியான காரணம்பற்றி, உபயோகத்திற்குக் கிடைக்கக்கூடும் பாலினளவு, ஜநஸமூகத்திற்குப் போதாமலிருப்பதால், பாலின்விலையும்வரவரமேற்போய்க்கொண்டே வருகிறது. இவ்விஷயம் பெரிய பட்டணங்களில் முக்கியமாய்க் காதலாமலகமாய்க் காணலாகும். அன்றியும் சென்ற சில வருஷங்களுக்குள் கால்நடைகளின் தீனிகளின் விலையும் விருத்தியானதும் இவ்விஷயத்தையே வற்புறுத்துகிறதென்னலாம். அல்லாமலும், சென்ற ஐந்து வருஷங்களுக்குள் பெட்டிப்பால் என்று வழங்கும் (Condensed Milk) முன்னைக்காட்டிலும் அரைமடங்கு அதிகமாய்இறக்குமதியாகிறதென்றால் ஜனோபயோகத்திற்குப் பால் போதாமை நன்குவிளங்கும். பாலின் விலையில் வர வர ஏற்றமுண்டாவது ஜனத்தொகையின் ஆவச்யகத்தினளவு கிடைக்காததாயினுமாகுக; அல்லது கால்நடைத் தீனி வகைகளின் விலையில் ஏற்றத்தினலாயினுமாகுக; அன்றேல், சிலர் அபிப்பிராயப்படுமாறு மேய்ச்சற்றரைகள் போதுமான அளவில் இல்லாமற்போனதாயினுமாகுக; வேறெக்காரணமாயினுமாகுக; அதல்ல நமக்கு முக்கியமான விஷயம். நாகரீகவிருத்திபற்றி, பால், பாலடியாகப்பிறக்கும் இதரபொருள்கள் (தயிர் நெய்யாதியவை) இவைகளின் விலையில் ஜடிதியான ஏற்றமுண்டாயிருக்கிறதென்பதொன்றே கவனிக்கத்தக்கது. நாகரீக விருத்தியாலும், காபி, தேயிலை, முதலியபானங்கள் அதிகப் பழக்கத்திற்கு வருவதாலும், முன்னிலும் அதிகஅளவில் பாலிற்குத் தேவையுண்டாயிருக்கிறதென்பது மறுக்க முடியாதது. இன்னொன்று. பெரிய பட்டணங்களில் கைத்தொழிற்சாலைகளும், இன்னும் மற்ற ஸௌகர்யங்களும் அதிகமிருப்பதுபற்றி அதிகக் கூலி வாங்கலாமென்று எதிர்பார்க்கும் கூலிவேலையாட்களும் இதரஸௌகர்யங்களை யுத்தேசித்து மற்றோருமாய், வரவர, கிராமாந்திரங்களிலிருந்து ஜனங்கள் பட்டணங்களில்வந்து குடியேறி, அதனல் பட்டணங்களின் ஜனத்தொகையை அளவிற்கு மிஞ்சி யதிகப்படுத்துகிறார்கள் என்பதும் தத்துவாரா, இப்பெரிய பட்டணங்களின் பாலின் தேவை யதிகப்படுகிறதென்பதும் நிச்சயம். தேவையினளவு பால் கிடைப்பதரிதாகவே, பாலில் கலப்பு அதிகப்படவேண்டியதும் அவசியமாகிறதென்பதும் கிடைக்கப்பெற்றது.

பாலை மிச்ரப்படுத்தி, அதன் நன்மையைக் குறைக்கும் விதங்களைப்பின்னர் கவனிப்போம். எவ்விதத்தாலாயினும் மிச்ரப்படுத்தப்பட்ட பாலினல், ஏற்படும் துர்க்குணங்களிலொன்று சிறு குழந்தைகளின் அளவு கடந்த அஸ்தானமரணமாகும். அமெரிக்கா ஐக்கிய நாடுகளில் (United States of America) வாஷிங்டனில், 1895 வருஷத்தில் பரிசோதனையின் பேரில் சுத்தமென்று தகுந்த உத்தியோகஸ்தர்களால் அத்தாட்சி செய்யப்படாத பால் விற்பனைக்கு வரக்கூடாதென்ற சட்டம் பிறப்பிக்கப்பட்டது. அதுமுதல், சீதபேதியினடியாகப் பிறந்த வ்யாதிகளால் ஏற்படும் சிசு மரணத்தின் ஸங்க்யை வரவரக் குறைந்துவந்தது. மேலும், பாலில் மிச்ரம் ஏற்படுவதனல், பாலிலுள்ள முக்கியமான, உணவுப்பொருள்கள் குறைவதுடன் பலவிதமான வ்யாதிகளும் உண்டாகின்றன என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அத்தகைய வியாதிகளுக்குள் டைபாய்ட்ஜுரம் (Typhoid fever) காலரா, சீதபேதி முதலியன சில. அன்றியும், இதில் நாம் முக்கியமாய் கவனிக்கவேண்டிய பாகம் பாலில் கலப்பு ஏற்படுவதற்கும் சிசுமாண ஸங்க்யைக்

கும் நெருங்கிய ஸம்பந்த முண்டென்பதே. ஆகவே, இவ்விஷயம் அசேஷ ஜனக்ஷேமத்தைப் பற்றியிருப்பதால், யாவரும் ச்ரத்தையுடன் கவனிக்கவேண்டிது என்று அறியற்பாலது. ஆனதுபற்றியே, பரிசுத்தமான பால் 'ஸப்ளை' விஷயமாய் 1907-ம் வருஷத்தில் 'ப்ரஸ்ஸல்ஸ்' நகரத்தில் கூடின காங்கிரஸ் தீர்மானங்களை யொத்து, 'ந்யூயார்க்' என்ற அமெரிக்கா கண்டத்திலுள்ள பட்டணத்தில் ஜனங்களுக்குச்சுத்தமான பால்ஸப்ளை கிடைப்பதற்கேற்ற பலவிதமான சட்டங்களை ஏற்படுத்தி கவனமாயிருந்து வருகிறார்கள் என்று தெரியவருகிறது.

இந்தியாவில், ராணுவ இலாகா ஸம்பந்தப் பட்டமட்டில் மேற் கூறியவாறு பாலின் சுத்த விஷயமாய் ச்ரத்தை யேற்பட்டிருக்கிறது. ஆனால்சிறிதுகாலமாக ஆங்காங்குள்ள மாகாண கவர்ன்மெண்டுகளும், விஷயத்தின் கௌரவத்தையறிந்த வேறுசிலரும், பொதுவிலேயே பால் ஸப்ளையை சுத்திகரிக்க முயன்றுவருகிறார்கள். பஞ்சாப் மாகாண கவர்ன்மெண்டாரால் இவ்விஷய பரிசீலனார்த்தமாக நியமிக்கப்பட்ட மிஸ்டர். எ.எம். ஸ்டௌ (Mr. A. M. Stow, I. C. S.) என்பவர் "இந்திய நகரங்களிலும் பட்டணங்களிலும் ஏற்பட்டிருக்கும் பால்ஸப்ளை ஏற்பாடுகள் நிரம்ப அதிருப்திகரமாயிருக்கின்றன. தெருக்களிலும், கடைகளிலும் பாலைக் கையாடும் விதங்களும், பசுக்கொட்டில்களும் பசுக்களுக்குத் தீனிபோடுவதற்குச் செய்துள்ள ஏற்பாடுகளும், மிகுந்த கர்ணடகமாகவும் தேக ஸௌக்கியத்திற் கேலாதனவாயு மிருக்கின்றன" என்று ரிபோர்ட் செய்திருக்கிறார். இப்படியே இன்னம் பலவிடங்களில் பரிசோதனைகள் செய்யப்பட்டு இதே முடிவு பெறப்பட்டிருக்கிறது.

ஏனைய விஷயங்களால், நாம் மேற்கொண்ட வ்யாஸத்தின் கௌரவம் எளிதில் விளங்கும். இனி சென்னைநகரின் பால் "ஸப்ளை" யைப்பற்றி சற்று விசாரிப்போம். இந்த வ்யாஸத்தில் பால் என்ற சப்தத்தில் பால்மட்டுமன்றி வெண்ணெய், நெய், தயிர் முதலிய பொருள்களும் கருதப்பட்டனவாகக்கொள்க. சென்னை நகர் முழுமைக்கும் பால் உள்ளூரிலிருந்தே கிடைக்கிறது. செலவாகும் வெண்ணெயில் பெரும்பாகம் பெங்களூரிலிருந்துவருகிறது. அநேகமாய், வேண்டிய நெய் அத்தனையும் கடப்பை, நெல்லூர், கோயம்புத்தூர், சேலம்ஜில்லாக்களிலிருந்தும், முக்கியமாய் பின்கூறிய இரண்டினின்றும் சென்னைக்குவருகிறது. சென்னையைச் சுற்றியுள்ள க்ராமாந்தரங்களினின்றும் வெகு சிறிய அளவு நெய்கிடைக்கிறது. மேற்படி க்ராமங்களில் வஸிக்கும் கன்னடியர் என்ற இடையர்களாலேயே சென்னையின் தயிர் 'ஸப்ளை' முழுமையும் நடந்து வருகிறது.

இக்கன்னடியர்கள், தாம் மைஸூர் ராஜ்யத்திலிருந்து இங்குவந்து குடியேறினதாக வ்யவஹரிக்கின்றனர். இவர்கள் சென்னைக்குச் சுற்றுப்புறங்களிலுள்ள க்ராமாந்தரங்களில்வஸிப்பவர்கள். இவர்கள்எருமைகள் தான்வைத்துப்பரிபாலிக்கிறார்கள். ஏனெனில் இவை பசுக்களைக் காட்டிலும் பால் அதிகமாகக் கொடுப்பதுடன் நீண்டகாலம் பால் வற்றுமலு மிருக்கின்றன. ஸென்ஸஸ் ரிபோர்ட்டின்படி இக்கன்னடியர்களில் சுமார் 4938 பேர்கள் இப்பால் வகைபறு வ்யாபாரத்தில் அமர்ந்திருக்கின்றனர் என்று வெளியாகிறது.

சென்னையில் பால் ஸப்ளைக்கு ஆதாரமாகவிருக்கும் பசுக்கள் நெல்லூர் பசுக்கள் என்று சொல்லப்படுகிற நெல்லூர் குண்டூர் ஜில்லாக்களில் உற்பத்தியாகும் பசுக்களே. இவைகள் சிற்சில ஸமயங்களில் சென்னைக் கருகாமையிலுள்ள புளியந்தோப்புச் சந்தையிலும், அங்கு மலிவாகக் கிடைக்காத ஸமயங்களில் நேராக நெல்லூர் குண்டூர் ஆகிய இவ்விடங்களிலிருந்தும் வாங்கப்படுகின்றன. மயிலாப்பூர் பக்கங்களில் சில நாட்டுப்பசுக்களும் காணப்படுகின்றன. இவைகள் பெரும்பாலும் பஞ்சமர்களுக்கு ஸொந்தம். அவர்கள் இடையர்கள் மூலமாய் பால் வ்யாபாரம் செய்கின்றனர்.

வேளை ஒன்றுக்கு சுமார் ½படி பால் செலவுள்ள குடும்பங்களுக்கு பசுக்காரர் பசுக்களைக் கொண்டுவந்து நிறுத்திப் பால் கறந்து கொடுக்கிறார்கள். இவ்வித அவசியம் நேர்ந்திருப்பதற்குக் காரணம் மேற்படி பசுக்காரர் கொஞ்சங்கூட பச்சாத்தாப மென்பதில்லாமல் கூடுமான அளவு பாலை மிச்சப்படுத்தி விடுகிறார்கள் என்பது தான். இந்தியப் பசுக்கள் பெரும்பாலும் தம்கன்றுகள் பக்கத்திலிருந்தாலன்றி பால் கொடுப்பதில்லை யாதலாலும், பக்கத்தில் கன்றில்லாமல் நிற்கும் பசுவின் பாலைச்

சாப்பிடுவது அசாஸ்த்ரீகம் என்று ஹிந்துக்கள் நம்புவதாலும், இக்கன்றுகளை பசுக்காரர்கள் பசுக்களோடு ஓட்டிக்கொண்டு, ஊரைச்சுற்றி வரவேண்டி யிருக்கிறது. பசுங்கன்றுகளோ வெகு சுகசரீரமுடையவை. அவைகளுக்கு இவ்வித அலைச்சல், சரீரம் இளைத்துப் பலமற்றுப் போவதற்கும் காலக்ரமத்தில் மரணம் ஸம்பவிப்பதற்கும் காரணமாகிறது. அன்றியும் இப்பசுக்காரர் பால் விற்றுப் பணருசி கண்டவர்களாதலால், சற்றுமிரக்கமின்றி, பசுவிலிருந்து பாலை ஒட்டக்கறந்து, அதனால் கன்றுகளுக்குப் போதுமான ஆஹாரமில்லாமலடித்துப் போடுகிறார்கள். பால் சுரப்பதற்கு அவசியமானவரை எவ்வளவு பால் அவைகளால் குடிக்கமுடியுமோ அதற்குமேல் ஒரு பொட்டுக்கூட அவை குடிக்க முடியாதபடி வெகு ஜாக்கிரதையாயிருப்பார்கள். ஐயோ! பாவம்!. இவ்வெளிய பசுங்கன்றுகள் தங்கள் விருத்திக் கவசியமான தாய்ப்பாலற்று (வேறுபாலேது!) வரவர இளைத்து, பலமற்று, பிற்காலத்திலும் உபயோகமற்றுப் போகின்றன. மறுபடி மாடுகள் வேண்டுமென்றால் நெல்லூர் குண்டூர் போக வேண்டியதுதான். பிராணி ஹிம்ஸைத் தடுப்பு ஸங்கத்தார் (S. P.C.A) புகுந்துழைப்பதற்கு இதோ விஸ்தாரமான பூமிகை யிருக்கிறது!

இம்மட்டிலுமல்ல. பசுக்காரர்கள் தமக்குச் சொந்தமான பசுக்களிலிருந்து க்ரமவழியிலோ அக்ரமவழியிலோ எவ்வளவு பால் கறக்கலாகுமோ அவ்வளவு கறக்காதொழியார். பசுவின் பாலை விருத்திசெய்வதற்காக, எள்ளுப்புண்ணாக்கு, நொய்யரிசிக்கஞ்சி, முள்ளுக் கீரைக் கஷாயம், வேகவைத்த சுரைக்காய் முதலியவைகளை ஆஹாரமாகப்பசுக்களுக்கு மிகுதியும் கொடுக்கிறார்கள். இதனால் அப்பசுக்களுக்கு அவர்களிழைக்கும் கெடுதியை அவர் அறிவதில்லை அல்லது கருதுவதில்லை. சில ஸமயங்களில் பசு பால் வற்றுவதுதான் அதன் உபயோகத்திற்கு எல்லை. சில திடகாத்திரமுள்ள பசுக்கள் இரண்டு அல்லது மூன்று ஈற்றுகள் வரைதாங்கிக்கொடுக்கும். அதன் பிறகு அவைகள் அடிமாடுகளாக ஆகவேண்டியதுதான். ஆஹா! என்ன மதியீனம்! உத்தமமான கோஸந்ததி இவ்விதம் நம் தேசத்திற்கு லபிக்காமல் குறைந்துகொண்டே வருகிறது.

பசுவைக்கெடுப்பது இம்மட்டில். இனி இவர்கள் பாலையும் கெடுக்கிறார்கள். பால் வாங்குபவர்கள் கண்டு பிடிக்காமலிருக்கவேண்டிய அவஸரத்தில், பாலைமிச்ரம் செய்யவேண்டியதற்கு ஜலம் எவ்விடத்திலிருந்து எடுக்கிறோம் என்றுகூடப் பார்ப்பதில்லை. சாக்கடைஜலமும் அவர்களுக்கு ஸம்மதந்தான். அகப்பட்டுக் கொள்ளாமல் எவ்வளவு ஜலம் பால்தகரங்களில் மறைத்து வைத்துக்கொள்ளக் கூடுமோ அவ்வளவு கட்டாயம் வைத்திருப்பார்கள். நேராடிப்பசுக்களைக் கொண்டுவந்து நிறுத்திக் கறக்கப்படும்பாலும் சுத்தந்தான் என்று நிச்சயமாய்ச் சொல்லமுடியாது. பாலை மிச்ரம் செய்வதில் அப்பால் விற்பவருக்குள்ள லாகவம் வாங்குபவரின் ஜாக்கிரதையிலும் அளவு கடந்தது. அதுவும் போதாததற்கு அவர் வடுவான ஒரு 'அஸிஸ்டன்டி'ல்லாமல் வெளியே புறப்படுவதில்லை. இந்த 'அஸிஸ்டண்டி'ன் வேலை கறக்கப்படும்பொழுது கன்றைப் பிடித்துக் கொள்வதென்ற வ்யாஜம் இந்த உதவிப்பாற்காரப்பையன்கையில் ஒருதகரம்தவறாதுவைத்திருப்பான். முன்னமேயே கறக்கப்பட்ட பால் அந்த பாத்திரத்திலிருப்பதாக வெளிப்போக்கு. உண்மையில் கறந்தபாலை மிச்ரிப்பதற்காக வீட்டிலிருந்தே தயார்செய்துவந்த வஸ்துவாக்கும் அதற்குள்ளிருப்பது. இவனுக்கு இன்னொரு வேலையும் உண்டு; அதாவது பால்வாங்குபவர்களுக்கு பால்காரனுடைய மிச்ரவிஷயலாகவத்தைக்காட்டிக்கொடுக்காமலிருக்கிறதுதான். இத்யாதிகாரணங்களினால் தம்வீட்டில் நேராடிப்பசுக்களைக் கொண்டுவரச்செய்து கறந்து பெறமுடியாத ஏழைகளென்ன, தங்களுடைய வேலைக்காரிகளைக் கவனிக்கவிட்டு கவலையற்றிருக்கும் பணக்காரர்களென்ன, இவர்கள்தாம் பால்மிச்ரத்தால் கஷ்டமடைபவர்கள் என்று ஏற்படும்.

முக்கியமாய்ப் பாற்காரர்கள் பாலை மிச்ரிப்பதென்பது இரண்டுவிதங்களில். தண்ணீரைக் கலப்பதொன்று; ஆடையை (பாலின்கொழுப்புபாகத்தை) யெடுத்துவிடுதல் மற்றொன்று. ஸாதாரணமாக, பாலின் ஆடையினொருபாகத்தை நீக்கிவிட்டு, அதனால் கனமாகும் பாலைத் தண்ணீர் சேர்ப்பதனால் சுத்தமான பால்போலாக்குவார்கள். எருமைப்பாலில் ஸரியளவு தண்ணீர் சேர்த்து பசுவின் பாலென்று விற்பதுமுண்டு. அன்றியும்பசுக்களைவெயிலில்வெகு

நேரம் கட்டிவைத்து, அதன் மூலமாய்த் தண்ணீர் அதிகமாகக் குடிக்கும்படிசெய்து, இவ்விதம் பால் மடியிலிருக்கும்போதே நீர்க்கும்படிசெய்வதுமுண்டு. ஆதலால் சென்னைபோன்ற பெரிய பட்டணங்களில் பால் மிச்ரிக்கப்பட்டதா அல்லவா என்று சோதித்தறிய வேண்டுவதற்குரிய ஸாதனம் அவசியமென்பது பெறப்படும். பாலில், மிச்ரம்பண்ணப் பட்டிருப்பதையறிய 'க்ஷீரசோதினி' (Lactometer) என்றொரு கருவியேற்பட்டிருந்தாலும், தன்னளவில் ஐந்திலொருபங்கு அல்லது குறைவாய்த் தண்ணீர் கலக்கப்பட்ட பாலின் தன்மையைக் காண்பித்துக்கொடுக்க அது போதாது. இக்கருவியால் மட்டுமல்லாமல், வேறு ஸாதனங்களாலும் பாலின் தன்மையைக் கண்டுபிடிக்க வேண்டும். பரீக்ஷித்தறிய எடுத்துக்கொள்ளப்பட்ட பாலில் கொழுப்புப்பதார்த்தம் எவ்வளவு, கனபதார்த்தம் எவ்வளவு, தண்ணீர் எவ்வளவு என்று பகுத்தறிய வேண்டுவதுடன், இன்ன கணக்குக்குக் குறைந்த பால் மிச்ரிதமென்று கருதப்படவேண்டும் என்று சட்டத்தால் நிர்ணயிக்கப்பட்டாலன்றி கதி பிறப்பதற்கு ஏது வில்லாமலிருப்பது துக்கிக்கத்தகுந்த விஷயம்.

ஏனெனில் பாலில் மிச்ரம் ஏற்படுவதாலுண்டாகும்அநர்த்தம்ஸாமான்யமல்ல.மாடுகள் அதிகப்பால் கறக்க வேண்டியதற்காக பாற்காரர் செய்யும் விஷயங்களும், பாலை யவர் கையாடுவதில் ஏற்படும்அசுசியும்,விளைவிக்கும் அநர்த்தங்களும் முற்கூறியவையிலும் குறைந்ததல்ல. நமக்குத் தெரிந்தவற்றுள் பாலைப்போல் அவ்வளவு நாஜூக்கான பதார்த்தம் வேறொன்றுங் கிடையாது. பாலைப்போல் வெகுசீக்கிரம்கெடக்கூடியதும் வ்யாதிக்குரிய பூச்சி(germs)களால் ஸ்வரூபபேதம் வெகுஎளிதில் அடையக்கூடிய பதார்த்தமும் வேறொன்றிலது. மேற்கூறிய விஷப்பூச்சிகள் (germs) வ்ருத்தியாகும்வேகம் நம்பக்கூடாதபடி வேகமாக விருக்கும். ஒரே ஒரு விஷப்பூச்சி (germ) 24-மணி நேரத்திற்குள் 165-லக்ஷம் பூச்சிகளாக விருத்தியாகிறதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது; இவைகள் பாலில் சேருவதுதான் பால்கெடுவதற்கு முக்கியமான காரணம். ஆதலால் கூடியமட்டில் இந்த ஜீவ அணுக்கள் பாலில் அண்டாதபடி செய்யவேண்டியது மிகவும் அவசியம்.

ஆனால் இவைகள் பாலில் ஸம்பந்தப்படாமலே முற்றும் தடுத்துவிடலாமென்பது ஸாமான்யத்தில் ஸாத்தியமாகிற காரியமன்று; ஏனெனில் இந்த ஜீவ அணுக்கள் கணக்கில்லாமல் பசுக்கள்கட்டும் கொட்டிலிலேயே ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்றன. மாடுகளின் மடிகளிலுள்ள பாலிலும்இந்தஜீவஅணுக்கள் சேர்ந்துவிடுகின்றன. ஆதலால் ஸாதாரண ஸ்திதியில் முதல் மூன்றுநான்கு 'பீல்' களில்வரும் பாலில் இந்த ஜீவ அணுக்கள் பரவியிராமலிருப்பதில்லை.சுத்தமாகக் கறக்கப்பட்ட பால் பெறக்கூடுமென்று வைத்துக்கொண்டபோதிலும், அதுவும் வெகு சீக்கிரத்தில் இந்த ஜீவ அணுக்களால் நிறையப் பெறும். ஆதலால் இவ்வணுக்கள் விருத்தியாவதற்கு சௌகர்யமான காலதேச வர்த்தமானங்கள் எவையென்று நாம் கவனித்தறிய வேண்டும்.

சில சமயங்களில் இவை மாடுகளின் மடிகளுக்குள்ளேயே சென்றுவிடுகின்றன. வேறு சில ஸமயங்களில் மடிகளிலேயே வ்யாதிகள் (Tubercolosis) நிலை பெற்று இருக்கும். இன்னும் சிலபோது, மாடுகளின் வயிற்றிலும் மடிகளிலும் ஒட்டிக்கொண்டிருக்கும் சாணி, (வெகு ஸன்ன அணுக்கள்) பாலில் உதிர்ந்து அதின்மூலமாய் அணுக்கள்சேருகின்றன. பாற்காரர்களின் பாத்திரங்கள் வெகு அசுத்தமாய், பல ஜீவ அணுக்களைக்கொண்டிருக்கும். கறப்பவர்கள் கைகளில் அழுக்கேறி யிருக்கக்கூடும். மேலும் பால் எவ்வளவுக்கெவ்வளவு உஷ்ணமாக விருக்கிறதோ, அத்தனைக் கத்தனை இந்த ஜீவ அணுக்கள் வந்து வியாபிக்கின்றன என்றும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

இத்தகைய விஷயங்களை யறிந்துகொண்ட பிறகு, சென்னை நகரில் பால் ஸப்ளையை நினைத்துப் பார்ப்போமானால் எத்துணை பயங்கரமாக விருக்கின்றது கவனியுங்கள்! பசுக்கொட்டில்கள் மகா பயங்கரமான கொடிய நாற்றம் வீசுகின்றன! பக்கங்களில் சகல வ்யாதிகளுக்கும் உற்பத்திஸ்தானமாக சாக்கடைகள்! பசுக்களின் ஆரோக்கியத்தைக் கவனிப்பாரோ கிடையாது! பசுக்களின் கதி எப்படியானாலும், அவையுள்ளவரை அவற்றின் ஸர்வஸ்வத்தையும் ஆகர்ஷிப்பதொன்றையே கருதின பாற்காரர்கள்! பசுக்களின்மேலெல்லாம் சாணமும் அழுக்கும் சேறும்! பாற்காரர் இன்னும்

அஸஹ்யர்! சில ஸமயங்களில் யானைக்கால் வ்யாதியுள்ளவர்களும் தோல் வ்யாதியால் பீடிக்கப்பட்டவர்களும பால் கறப்பவர்கள்! அழுகினது, புளித்தது, கெட்டது முதலிய எந்த தண்ணீராலும் பசுவிற்குப் பாதகமில்லை(பாற்காரன் மதத்தில்)! ஐயோ கஷ்டம்! பாபம்! பாபம்! கஷ்டம்!

இவைகளை யுத்தேசித்து பால் 'ஸப்ளை' விஷயமாக அடியிற் கண்டபடி ஜாக்ரதை யெடுத்துக்கொள்ள வேண்டும். (i) பாலில் மிச்ரம் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியதுடன், பசுக்கள் கட்டுமிடம் சுத்தமாக விருக்கின்றனவா, ஆரோக்யமான ஆஹாரம் அவைகளுக்குக் கொடுக்கபபடுகிறதா வென்று கவனிக்க வேண்டும். (ii) பால் தெருவில் கறக்கக் கூடாது. (iii) முதல் நான்கு அலலது ஐந்து 'பீல்' பாலை கன்று பருகும்படி விடவேண்டியது. (iv) கையை பதப்படுத்துவதற்காக, இடையன் பாலில் கையை விடுவதை நிறுத்தவேண்டும். (v) பால் கறப்பதற்கு முன்னமேயே மடி, முலைக்காம்புகள் முதலியனவற்றை சுத்தஜலம் கொண்டு நன்றாய்க் கழுவவேண்டும்.

அல்லாமலும், அசேஷ ஜனாரோக்யத்தைக் காப்பாற்றுவதில் கடமைப்பட்ட மெட்ராஸ் கார்பரேஷன் இவ்விஷயத்தில் ஊக்கமெடுத்துக்கொள்ள வேண்டும். (i) சுத்தமான பாலின் ஸ்வரூபம் இன்னதென்று வரையறுக்க வேண்டும். (ii) பசுக்களின் ஆரோக்யத்திற்கேற்ற நிபந்தனைகளின்படி பசுக்கொட்டில்கள் கட்டி, இடையர்களுக்கு ஸ்வல்ப குடிக்கூலிக்கு விட வேண்டும். (iii) கொட்டில்களை சுத்தமாய் வைத்திருப்பவர்களுக்கு பரிசுகள் அளிக்கவேண்டும். (iv) காலகரமத்தில் பால் ஸப்ளைக்கும் லைஸென்ஸ் ஏற்படுத்தி, மிச்ரம் செய்பவர்கள் குற்றத்திற்குள்ளாகும்படி செய்யவேண்டும்.

இப்படிப் பொதுஜனமும், பொதுஜனநன்மையை நாடின முனிஸிபாலிடியாரும் சேர்ந்து இந்தத் துறையை சீர்திருத்த முயலுவார்களானால், மேற்கூறிய வ்யாதிகளால் இறப்பவர்களுடைய ஸங்க்யை குறைந்து தேசத்திற்கு க்ஷேமம் உண்டாகுமென்பது இப்பொழுது நாம் வற்புறுத்த வேண்டிய தில்லாமலே விளங்கும்.

A. ஸ்வாமிநாதய்யர், பீ. ஏ.

# ஆரோக்ய சாஸ்த்ரம்

## THE SCIENCE OF HEALTH

நிறைந்த செல்வமடைந்து உயர்ந்த பதவியிலிருக்கவும், நோயற்று த்ருடசரீரத்துடன் வெகு காலம் ஜீவிக்கவும் விரும்புவது ஸர்வஜனங்களுக்கு மியற்கையே. தனம் ஸம்பாதிக்கும் விஷயத்தில், பலர் பலவிதமான முயற்சி செய்து, தங்கள் ச்ரமத்துக்கும் அத்ருஷ்டத்துக்குமுரிய த்ரவ்யாதி பாக்யம் பெறுவதை நாம் பார்த்து வருகிறோம். பொருளிருந்தாலே, ஸுகமுண்டாகுமென்பதில்லை. தனதான்ய ஸம்ருத்தியுள்ளவர்களும், வ்யாதியால் பீடிக்கப்பட்டு மனோதுக்கத்தை யனுபவிப்பதுண்டு. 'நோயற்றவாழ்வே வாழ்வு' என்கிறபடி எளியதசையிலிருந்தாலும், ரோக பீடையில்லாமல், த்ருடகாத்திரனாய், தான் ஸுகமாயிருப்பதுடன் பிறருக்கு முபகாரஞ் செய்யக் கூடிய ஸ்திதியிலிருப்பதே பெரும் பாக்யம். தேகத்தில் வ்யாதி குடி கொண்டும், இளமைப் பர்வத்திலேயே, கை, கால், கண் முதலிய அவயவங்கள் திராணியற்றும், தனக்குமனோத்ஸாகமின்றி உறவினர்களுக்கு அஸௌகர்யமும் க்லேசமு முண்டாகும்படி வாழ்வதைவிட இறப்பதே மேன்மை. பிறர் நன்குமதிக்கும்படி செல்வமும் அதிகாரமும் பெற்று, மேன் மேல் தங்கள் பேராசையை பூர்த்தி செய்துகொள்ளக்கூடிய ஸ்திதியிலிருப்பவர்களும் கொடியநோயால் வருந்தும்போது, இவ்வுலகில் எல்லாவற்றைக் காட்டிலும் அத்யந்தம் ப்ரியமான தங்கள் உயிரையே மாய்த்துவிடத் துணிகிறார்களென்று பலஸமயம் கேள்வியடைகிறோம். பாபமற்ற ஸர்வ ஸுகானுபவங்களுக்கும் முக்கியகாரணமான தேக ஆரோக்யத்தை தேடிக்கொள்வது எல்லாருக்கும் முதல் நோக்கமாயிருக்க வேண்டியதாயினும், அது விஷயமான அறிவை ஸம்பாதிக்க முயலாமல், ரோகம் வருவது தெய்வாதீனம், மனுஷ்யனால் தடுக்கக்கூடியதல்ல, அப்படிவந்தால், வைத்தியன் மூலமாய் சிகித்ஸை செய்துகொள்ளலாமென்று நினைத்து உதாஸீனமாயிருப்பது உலகவிந்தையிலும் விந்தை. பௌதிகசாஸ்திர (Materialistic Science)த்தில் இடைவிடாமல் பரிச்ரமப்பட்டு மிகும் நாகரிகமுடையவும், ஜனங்களுக்கு ஹிதகரமான வித்யைகளை ஸர்வ

ப்ரகாரமாய்ப் பரவும்படி செய்வதில் மிகுந்த ஆஸக்தியுமுள்ள மேற்கு தேசத்தாரிடத்தி லேயே இவ்வித நிலைமை இருப்பதாகத் தெரி கிறது. இந்தியதேசத்தில் கேட்பானேன்? கஷ் டப்பட்டு ஸம்பாதித்தால்தான் கல்வியின் அரு மை அறிவார்கள் என்ற எண்ணத்தினலும், ஸாதனக்குறைவுகளினலும், இதரகாரணங்களி னலும் வித்யாப்ரசாரம் இத்தேசத்தில் ஸுலபமாய் ஏற்படுகிறதில்லை. அதிலும், சரீர சாஸ்த் ரஜ்ஞான ஸம்பாதன மூலமாய் தேக ஆரோக் யத்தைத் தேடிக்கொள்ளும் ப்ரயத்னம் தத் காலம் மிகவும் ஸ்வல்பமாயிருக்கிறது. வ்யாதி பீடையில்லாமல், தேக ஸௌக்யத்துடன் வாழவேண்டு மென்கிற ஆஸ்தையிருக்கலாம். ப்ரயத்ன மில்லாவிட்டால், விரும்புவதினு லேயே எண்ணம் பலிக்குமா? இரைவேண்டு மென்று இச்சித்து, சிங்கம் குகையில் படுத்து உறங்கினல், மிருகங்கள் தாங்களே அதன் வாயில் வந்து விழுமா? ஸதா ரோகியாயிருப் பவனை நோக்கி, "ஏன் ஐயா, எப்போதும் வ்யா திக்ரஸ்தராய், தேக ஸுகமில்லாமல், அடிக்கடி டாக்டர் வீட்டுக்குப் போய்க்கொண்டிருக்கிறீ ரே? காலத்தில் ஸ்நானஞ்செய்து, அழுக்கற்ற வஸ்த்ராதிகளை யணிந்து, நல்ல உணவும் ஜலமு முட்கொண்டு, வீட்டையும் அதன் சுற்றுப்பக் கங்களையும் குப்பை செத்தையில்லாமல் சுத்த மாய் வைத்துக்கொண்டு, நோவு அடிக்கடி வரவொட்டாமல் தடுத்துக்கொள்ளக் கூடா தா? வீணய் த்ரவ்யச்செலவையும், ஸுகக் குறைவையும் தேடிக் கொள்வானேன்?" என்று கேட்டால், அதற்கு அவன், "வ்யாதி வருவதும் போவதும் நம்மைக் கேட்டா ஏற் படுகிறது? ரோகத்தால் அவஸ்தைப்பட தலை விதியிருந்தால் விடுமா? அதிருக்கட்டும். விசால மான வீடும் சுத்தவஸ்திரங்களும் நல்ல உண வும் தேடிக்கொள்ள, நாம் என்ன ப்ரபுவா? பங்களா இருக்கிறதா? அப்படித்தானிருந்தது, எல்லா ஸௌகர்யங்களையுமுடைய பெரியமனு ஷ்யர்களுக்கு வ்யாதி வருவதில்லையா? ரோக மில்லாதவன் ஜகத்திலுண்டா? இதெல்லாம் சுத் தப் ப்ரமை; காலவ்யத்யாஸம், ஏதோ இரண்டு கோண எழுத்துத்தெரிந்துவிட்டால், இத்தே சத்தில் வெகு நாளாய் நடைபெற்று வரும் ஆசார ஒழுக்கங்களை யெல்லாம் தூஷித்துப் புதிதுபுதிதாய் பேசுகிருர்கள்," என்றும் இன் னம் இம்மாதிரியாகவும் சொல்வது அபூர்வ மில்லை. ஆங்கிலேய பாஷையில் தேர்ச்சியடை ந்து லௌகிகஜ்ஞான ஸம்பன்னர்களுள் கூட அனேகர், ஆரோக்யசாஸ்த்ரத்தின் உபயோகத் தையும் ஆவச்யகத்தையும் நன்குணர்ந்ததாக அனுஷ்டான மூலமாய் ஏற்படவில்லை. வ்யாதி நேர்ந்தால், தாது புஷ்டிகரமான ஔஷதங் களாலும், மற்ற விதத்திலும் பரிஹாரம் தேட வெகுப் ப்ரயத்தனப்படுகிருர்களே தவிர, தேக ஸௌக்யத்துக்குரிய ஆஹாராதி நியமங்களை யும், மற்ற ஸாதனங்களையும் கவனித்து, தக்க படி முன் ஜாக்கிரதை எடுத்துக்கொள்வதாக வ்யக்தமாய் காணப்படவில்லை. நோயுண்டாகுங் காலத்தில் 'நாம் என்ன செய்யலாம், ஸார், கூடியவரையிலும் சுத்தமாயும் ஜாக்கிரதை யாயுந்தானிருக்கிறேம். தேகஸுக விஷயத் தில் அவ்வளவு கண்டிப்பாயிருக்க ஸாத்யப் படுகிறதா? எவ்வளவோ தாக்ஷிண்யம் நேரிடு கிறது. தள்ள முடியவில்லை. தவிர, இப்போது கால நிலைமை (weather) நன்ருயில்லை. எல் லாருக்குமே இந்த ஸீக் வருகிறதாம்' என்று சிலரும், மற்றவர் "வீட்டிலே பொம்மனுட்டி களுக்கு சுத்த மூடத்தனம், சொன்னல் தெரி கிறதில்லை. எல்லாம் கர்நாடக ஆசாரம். நாகரிக முள்ள இதரதேசங்களில் வழங்கும் வ்யவஹா ரங்களையும், ஸயன்ஸில் புதிதுபுதிதாய் ஏற்படும் சூழ்ச்சி, காட்சிப்பொருள்களையும்பற்றி அவர் களுக்கு ஒரு அக்ஷரம் தெரியுமா? அவர்க ளோடுகூடத்தான் கஷ்டப்பட்டுக் காலந்தள்ள வேண்டியிருக்கிறது. புருஷர்களைப்போல், ஸ்த்ரீகளும் இங்கிலீஷ் படித்துத் தேர்ந்தா லொழிய இந்தியாவுக்கு கதி மோக்ஷமில்லை" என்றும் இன்னம் பற்பலவிதமாகப் பேசுவதை யும் அனேகர் கேட்டிருக்கலாம். இதனல், அவர்களுக்கு தேகசாஸ்த்ரத்தில் நம்பிக்கை யும், அது விஷயஜ்ஞானத்தைப் பரவச்செய்ய வேண்டுமென்கிற உத்ஸாகமுமில்லை என்று சொன்னதாக எண்ணக்கூடாது. தேகச்ரமம், த்ரவ்யநஷ்டம், லோகாபவாதம், பிறர் நிந்தை இதுகளை யெல்லாம் கவனியாமலே, தத்கால த்துக்கொத்தபடி இந்தியதேசத்தார்களின் எல் லாவித க்ஷேமத்துக்கும் வேண்டிய சீர்திருத் தங்களைச் செய்ய எப்போதும் முயன்றுவரும் தலைமை ப்ரபுக்களுக்கு, ஜனங்களுக்கு அத்யந் தம் ஹிதமான இவ்விஷயத்தில் ச்ரத்தையும்,

உத்ஸாகமுமில்லை யென்று சொல்லக்கூடுமா? இத்தேசத்தின் ச்ரேயஸ்ஸைத் தேடுவதே முக்ய நோக்கமாயுள்ள இங்கிலீஷ் ராஜாங்கத்தாரும், தனத்தாலும் கல்வியினாலும் ஸஹாயம் செய்யக்கூடிய தார்மிகர்களும், எல்லாவற்றைக்காட்டிலும் முக்யமாய்தெரிந்துக்கொள்ள வேண்டிய சரீர ஸுகத்துக்குரிய அறிவை கொஞ்சகாலத்திலேயே ஸ்திரீ, புருஷர், பாலர், வ்ருத்தர் முதலிய எல்லாரும் சுலபமாய் தாங்கள் தங்கள் பாஷையில், பாடசாலையிலோ, லளித நடையில் எழுதப்படும் புஸ்தக மூலமாயோ, கற்று அனுஷ்டானத்தில் அந்தஞ்ஞானத்தை உபயோகப்படுத்துவதில் ஏற்படும் பாதகங்களைப்போக்கி, வேண்டியஸாதகங்களை உண்டு பண்ணி, ஜனங்களின் ஸந்தோஷம், நன்றியுணர்வுக்கும், பகவத் க்ருபைக்கும் பாத்ரமாவார்களென்று நம்பலாம். எல்லோருக்கும் வ்யாதி வரக்கூடும்; தேகவலிவுள்ளவனும் பிணியால் வருந்தும்படி சிலஸமயம் நேரலாம். ‘கண்கெட்ட பிறகு ஸூர்ய நமஸ்காரம்’ என்பதுபோலிராமல், முன்ஜாக்கிரதையாயிருத்தல் நலம் என்று சொல்லவேண்டுமா? சுத்த உணவு, பானம், ஆடை முதலிய வாழ்மை நிலைமைகளால் வியாதி வராமலே தடுக்கலாம்; அல்லது அடிக்கடி வரவொட்டாமலாவது செய்து கொள்ளலாம். வந்த ரோகத்தைத் தீர்ப்பதற்கான மார்க்கத்தைச் சொல்வது வைத்யசாஸ்த்ரம். மிகுந்த பொருட்செலவு செய்து தேகச்ரமப்பட்டு இதில் தேர்ச்சியடையலாம். இது ஸர்வஜன ஸாமான்யமாக ஏற்படுவது கஷ்டம். வைத்ய சாஸ்த்ரத்தின் பாகமென்று சொல்லக்கூடிய ஆரோக்ய சாஸ்த்ரமானது, கூடியவரையில் நோய் வராமல் தடுப்பதற்கும், அதிகப்பொருள் நஷ்டமின்றியே, இவ்வுலக வாழ்க்கைக்குரிய ஸௌகர்யங்களைத் தேடிக்கொள்வதற்கும்ஸாதகமான அறிவை உண்டுபண்ணும். ஸுலபமாய் எல்லாரும் தெரிந்துகொள்ளலாம். தேக ஸுகத்தை நாடியே மேன் மேலும் மஹா ப்ரயாஸைப்பட்டு புதிது புதிதான கருவிகள், யந்த்ரங்கள், மற்ற ஸாதனங்களையும் கண்டுபிடித்து, நாகரீக வ்ருத்தியைத்தேடும்இக்காலத்தில்கூட, சரீரம் எப்படி அமைக்கப்பட்டிருக்கிறதென்றும், அது அடிக்கடி நோவுக்குட்படாமல் க்ரமமாய் வளர்ச்சியடைவதற்குண்டான ஸாதக பாதகங்கள் என்னவென்றும் தெரிந்துகொள்வது அத்யாவச்யமென்றும் சொல்லவேண்டுமா? தெய்வ ஸ்ருஷ்டிகளுள் அதிவிசித்திரமான தேகயந்த்ரத்தின் ஸ்வரூபந்தெரியாமல், சரீரத்தைப்போஷித்து உலகவாழ்க்கை செய்வது அடிமரத்தை வெட்ட நுனிமரம் ஏறுவதற்கொப்பாகும். அதுவிஷயமாய் ஜனங்களுக்கிருக்கும் அஜ்ஞானத்தைப்போக்கி, ஞானத்தைப்புகட்டுவது, இவ்வார்ய பூமிக்கு ஹிதம் செய்யக்கூடிய தேசாபிமானிகளின் முதற்கடமை. ஆனால் இவ்விஷயத்தில் நன்றாயாராய்ந்து, இந்தியாதேசத்தின் சீதோஷ்ண ஸ்திதிக்கும் ஜனங்களுடைய நிலைமைக்கும் மனோநோக்கத்துக்கும் பொருந்தும்படியான அறிவே அவர்களுக்கு ஏற்படும்படி செய்யவேண்டுமேயொழிய, நம்மவருடையதேகஸ்திதி, எளிமை முதலியதற்கொவ்வாததும் அநிச்சயமான உபயோகமுள்ளதும், வீண் டம்பத்துக்குரியதாயுமுள்ள கல்வி உண்டாகும்படி செய்வது உசிதமல்ல. விபரீதஞ்ஞானத்தைவிட, அஞ்ஞானமே ச்ரேஷ்டம். யதார்த்தஞானமே ஸுகமளிக்கும்.

A. வரதாச்சார்யர், பீ. ஏ., எல். டி.

---

## ஐக்கிய நாணய உணர்ச்சியைப்பற்றி இந்தியா கவர்ன்மெண்ட் தீர்மானம்

ஐக்கிய நாணய நிதிச் சங்கங்களைப்பற்றிய சட்டம் ஏற்பட்டது முதல் ஐக்கிய நாணய உணர்ச்சி எந்த மட்டில் இந்தியாவில் பரவியிருக்கிறதென்பதைச் சீர்தூக்கிப்பார்த்து, இந்தியா கவர்ன்மெண்டாரால் ஒரு தீர்மானம் வெளியாயிருக்கிறது. அந்தத் தீர்மானத்தில் ஐக்கிய நாணய உணர்ச்சி படிப்படியாய் விருத்திமுகம் காட்டிப் பரவினது சுட்டிப் பேசப்பட்டிருக்கிறது. ஐக்கிய நாணய நிதிச் சங்கங்கள் புத்திசாலித்தனமாய் நடத்தப்பட்டுக்கொண்டு போமானால், நாட்டின் பொருளாதார நிலைக்கும், சமூகவாழ்க்கை நிலைக்கும், கல்வி நிலைக்கும் பெருத்த அனுகூலங்கள் விளையுமென்பதற்கு இது வரை ஏற்பட்டுள்ள சங்கங்கள் சாட்சிகளாயிருக்கின்றனவென்றும், 10 வருஷங்களுக்கு முன்னே சிற்சில இடங்களில் ஐக்கிய நாணயச்சங்கங்கள் பரீட்சார்த்தமாய் ஸ்தாபிக்கப்பட்டதுபோய், இப்போது இந்தியாவில் 12000த்திக்கு மேற்பட்ட சங்கங்களும், 6 லட்சத்துக்கு மேற்பட்ட மெம்பர்களும் இருக்கிறார்களென்றும் இப்போது வேலை செய்து கொண்டிருக்கும் சங்கங்களுக்கு 5 கோடிரூபாய் போட்டுப் புரட்டவிருக்கிறதென்றும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.



# வெண்டாமரையாள்

## துவாதசாந்த மாலை

## IN PRAISE OF SARASVATI

### காப்பு—வெண்பா

தண்டாதென் னுள்ளத்திற் சார்ந்தின்ப மேயளிக்கும்
வெண்டாம ரைக்கிறைவி மேன்மாலைக்—கொண்டா [டத்
தோழமைபூண் டென்னன்பைத் தூயதாச் செய்தரு [ளும்
வேழமுகன் றாட்டுணையே வேண்டு.

### துவாதச மாலை

பொன்பூத்த பதுமமலர்த் தவிசாகி யதனினிறைப்
பொருளாகித் தெருள தாகிப்
புகலுமறை யுபநிடத மாவாக்ய மாகியுயர்
பூரணப் போத மாகிக்
கொன்பூத்த பரமநிலை வைப்பாகிப் பேரின்பக்
கூறாகி வேறதாகிக்
குலவுவிசு வம்பதித் துவமாகி நித்யசுகக்
கோலவடி வாகி ஞான
மன்பூத்த வடிவருள வமுதாகி யதனினடு
வயமாகிச் சுயம தாகி
வண்மைமிகு புயலனைய வருண்மாரி கொண்டுதவு
மதியாகி விதிய தாகி
மின்பூத்த நிதியமென வொளிர்தரு செஞ்சரணமலர்
விளக்கி யருள் வாழ்வுதருமோ!
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாமரைக்கி றைவியே. 1.

பண்பாத கல்விதீஞ் சொற்சுவைய பநுவலும்
பகருநற் பொருளும் பல்கிப்
பற்பலவ தானமும் விற்பன விவேகமும்
பாங்குறனி ணுது பொற்பை
யெண்பொழுதி லெளிதெய்தி வந்தெதிர் புரிந்த
மென்னவா வாத மோலித் [ருளு
தெழுதாம றைக்கிளவி தொழுதாடு கிற்பவதை
யெணிடாத லைந்த லைந்து
மண்படுபு னிலவுகாத் திடுகிளைய தாகுமென்
வன்மனக் கவிவாஞ் சையின்
வன்மைகண் டிகலிகை விடுவையே லஃதினும்
வருத்தமிக் குலகி லுண்டோ!
விண்பெறுநீ தாய்! மகன் யான்! என்று வையகம்
விளக்கிலது கருணை வைப்பாம்.
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கி றைவியே. 2.

மருவுமூ லத்தினிற் குண்டலிச் சத்தியாய்
வளர்சுவா திட்டா னமாம்
மனையினிற் கலைமகளி னுருவா யதற்குமேன்
மணிபூர கத்தி னிற்செங்
திருவுருவ மாயொளிர ளுகதம னைக்கவொரு
செய்யருத் ராணி யாகித்
திகழ்தருவி சுத்தியின் மகேச்வரிய தாயருட்
செறிந்திலகு மாக்கி னையினில்
அருவுருவ மாகியம னோன்மணி யெனப்பொலிந்
தணிமருவு பிரம ரந்த்ரத்
தறிவுதரு சிற்சத்தி வடிவாய்து வாதசாந்
தத்திலா னந்த மயமாம்
வெருவறுநற் சத்தியா யிலகுமுனை யேத்திதினம்
வேண்டுவே னுமத டிமைநான்
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கி றைவியே. 3.

திப்பியதொ ருண்மைநெறி யாவுமே குடிகொண்ட
தேசிகச் சலதி புக்குச்
செய்யநன் னூலிலக் கணவிலக் கியமெனுந்
தெண்ணீர் தெவிட்ட வுண்டு
செப்பரிய கற்பனைச் சூற்கொண்டு பேரறிஞர்
சேரவைச் சேண்ப டர்ந்து
சீருற்ற பிரஸங்க விடியொலிபு லறிவினர்
திடுக்கிடும் படிமு ழக்கி
யொப்பினற் பொருண்மினற் காட்டிநிறை கவிமாரி
யோங்கியார்ந் தெவனும் வருஷித்
துறுகாள மேகமிய லிசைநா டகத்தமி
ழூற்றுப்பா சண்ட வாக்கை
மெய்ப்பவெற் கீந்தருள வேண்டுமெடி மைக்குனது
வேட்கைதிரு வுளமென் கொலோ!
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கி றைவியே. 4.

தேருமறை யாகமமோ டறுபத்து நான்குகலை
சிற்பகணி தாதி யாவுஞ்
சீருறவ றிஞ்சருழி சென்றுபணி யாற்றிநற்
செவிவாய் மடுப்ப ஞான்றுந்
தீரமுற வுள்ளத்திற் பதித்தவண நிற்கவொரு
தெவ்வலல் குரவு விசனஞ்

சீற்றமொடு வந்தெதிர்ம லைந்தமா முற்றிடினுஞ்
செய்கையாக் கொள்ளா துமேற்
சாருங் கல்வியைக் கற்குபொழு தெதிர்ந்தெழுஞ்
சங்கையெனு மோர்பா வியைத்
தகர்ந்துசெல் லும்போது மறப்பெனும் பகைவனுட்
டதைந்துகொளே கொள்ளு கிற்கும்
வீரமதை யென்சொல்வி யாற்றுகே னேழைநா
வீற்றிருந் தருளல் வேண்டும்!
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக் கிறைவியே. 5.

எழுத்தோடு சொற்பொருள்க ளணியாப்ப லங்கார
மிதயத்தி ருத்தி யென்றும்
எண்ணெண்க லைம்முழுது மறிவுறுத் திடுஞான
மேய்ந்தவர்க் குழுவி லார்ந்து
பழுத்தபுல மைத்திறம தாயாது புழுத்ததோர்
பழுவமெனத் தோற்றி பொய்ம்மைப்
படிவகனி தொண்டிகலி துடியிடைப் பெண்ணடை
பணிப்புறற் சேது வாகி [விற்
வழுத்துபுகி லாக்கொடுங் கடையரிற் கடையனேன்
வண்டமிழ்ப் பாப்பாய் வனே
மலர்மேலி ருந்தவளு மலைமேல்வ ளர்ந்தவளு
வாழ்த்தியங் கினிது சாற்றும்
விழுத்தகு நிணுதுமலர் வழுத்தியுள மேபாச
வியனறிவு யருளல் வேண்டும்
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கி றைவியே. 6.

போகமளே யாடுபுல் லறிவினர்கள் போலாது
புந்தியுடல் வாக்கு மொன்றிப்
புத்தமுத மொத்ததமிழ்ப் பொங்குபுது வெள்ளநீர்
புக்கிடைய மர்ந்து செஞ்சொல்
வகபா தந்திரியு வண்ணங்க லித்துறை
யிசைப் பனுவல் கோவை பரணி
யெனவுரைப் பல்கவிக ளாற்பரம பொருளிதனின்
இயல்பனைத் துங்கு றித்த
நிகழுந்த டத்திலக் கணமுந்த தரித்த நல
சீர்மைமித சாது சங்க
நேர்ந்துநின் றவர்சரண பங்கேரு கஞ்சூடி
நிற்கநிலை புரிதற் காய
வேகமுட னினதாணை வைப்பிடம தன்றிபிற
வியஞ்சகமு மொன்று முளவோ !
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாமரைக் கிறைவியே. 7.

சொன்முறைதெ ரிந்துகலை கற்கநில் லேன்முனோர்
சொற்றமுறை யாய்ந்து பல்கால்
தொழும்புபுரி கற்சன்பு தனமுமின் றென்றும்நற்
சோபானத் துறையை யண்மி
மன்முறையொ ழுக்கமுட னிற்கவிலை நியமமாம்
வகையுண ந தற்கு மிலைபுன்
வடிவமோ திரமில்லை சொப்பனத் தினும்ஞான
மகிமையை யுணரற் காகா

பன்முறைபே ரின்பநெறி யன்பர்புகல் கிற்றினும்
பற்றுரு திற்றை மோசப்
பக்ஷமேற் கொண்டெதிர்க் கக்ஷிபூண் டிடுமுளம்
பரமார்த்த மேத றியுமோ !
மின்முறை வதிந்தமகி பொன்னொடுகு லாவவரு
விபுலவைப் பிடம தாய
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக் கிறைவியே 8.

முருக்கலருங் காவிபொரு வள்ளைமுத னேர்குமிழு
முகைமுல்லை நிறைந றைக்கு
முதமுபைந் தொடியுடைத் தோன்றிநெய் தற்கான
முகிழ்கன்னி கார முகையுந்
திருக்கிளரு நூபுரப் பற்பமுஞ் செறிகடவு
டேருனம் வெண்க மலமேற்
சீர்பெற்ற கலைமுதல கலைசொற் றிருந்தென
திகழ்வுற்றி ருந்த கன்று
பெருக்கமுறு பொருளைகெழு பரம்புறைசலான்றவள்
பிறங்கிவளர் மூன்று சங்கப்
பெட்பொளிர வந்தமுத முத்தமிழ்க் குழுவிநரைப்
பேணற்கி யைந்த தெய்வ
விருக்கமே யெனுதுதுய ரறுக்கவுளங் கொளாததுவும்
வியப்பினும் வியப்பிதம்ம !
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கி றைவியே. 9.

பூவலய மீதுடற் பொருளாவி யாவுநின்
பூங்கழன்ம லர்க்கு ளிட்டுப்
புகலிடம டைந்தசெந் நாப்புலவர் போலாத
புன்மையான் வஞ்ச நெஞ்சப்
பாவகனென் றெனைமுற்றுங் கைவிடுவையேலெனது
பாடும்பொய்ப் பட்டு சித்தம்
பையபித் தேறிடும் வீணை காயமும்
பவுரிகெட் டலையு மந்தக்
கேவலம தால்வருவ தாம்பாவ நிந்தனை
கேட்டவர்க ளிருவர் தன்னைக்
கேடுடைய னென்றுநகை செய்துகை கொட்டிடுவர்
கேதம தொழித்து ஞான
மேவரும் பண்பருளேச் செய்துமே பார்க்கினின்
மேதகைக் கிழிபதாமோ .
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கி றைவியே 10.

ஏழையின் குறைநீக்கி யாதரவு செய்வையேல்
ஏளனம் வந்து விடுமோ
எண்கணன் பாற்பெருமை பேசுவதி லென்முறையு
னிருசெவியி னுழைய விலையோ
ஆழிசூழ் புவிமீது மகிமைபெறு நினதுதிரு
வருளான தும்பொய்த் ததோ
அடிமையைக் காப்பதிலை யெனவிரத கங்கணம
தங்கையிற் பூண்ட. துண்டோ
ஊழின்ப டிக்கன்றி வேறுநட வாதிஃது
முறுதியென் றுவதொருவாக்

# ராஜ சரிதம்
## பாரஸீகம்—A. காம்பைஸீஸ்
## LIVES OF KINGS
## Persia—A. Cambyses

பாரஸீக ராஜ்யத்தில் மிகுந்த ப்ரக்யாதியோடும் ஆண்டு வந்தவரசர்களில் ஸைரஸ் என்பவர் ஒருவர். அவருக்கு ஒருகுமாரன் பிறந்தார். அவர் பெயர் காம்பைஸீஸ். ஸைரஸ் தன் தேசத்திற்கு வடபார்ச்வத்திலுள்ள சில காட்டுமிராண்டி ஜனங்கள் செய்தகலகத்தை அடக்குவதற்காகப் படையெடுத்துச் சென்றிருந்தபொழுது அவர்களால் கொலையுண்டு இறக்கவே, காம்பைஸீஸ் பட்டத்திற்கு வந்தார்.

சௌர்ய பராக்ரமங்களில் காம்பைஸீஸ் தன்பிதாவிற்கு நிரம்பத்தணிந்தவரல்லவென்றாலும், அவருடைய புத்திசாதுர்யம், ஸமயத்திற்கு ஸமயம் ஒளிவிட்டோங்கும் *யுக்திவிசேஷம், பூததயை,ப்ரஜைகளை வசம் செய்துகொள்ளும் சக்தி முதலிய ராஜகுணங்களில் முற்றிலும் குறையுள்ளவர். இவருடைய செய்கைகளையுற்று நோக்குமிடத்து, இவருக்குக்கொஞ்சம் பைத்தியம் கூடவுண்டோ வென்றெண்ணும் படியாகவிருக்கும். தோட்டிமுதல் தொண்டமான் வரையுள்ள ஸகலர்களும் இவர் தமக்கு எந்தஸமயத்தில் ஏதுசெய்வாரோ என்று நடுநடுங்கியிருப்பார். இவரிடம் நேசமாயிருந்தவர் ஒருவருமே கிடையாது.

பட்டத்திற்குவந்ததும் தன்னுடைய பிதாவைப்போல் தானும் பலதேசங்களைப்பிடித்து ராஜ்யத்தை விஸ்தாரப்படுத்தி, க்யாதிமானாக விளங்கவேண்டுமென்ற ஆசை இவருக்கு உண்டாயிற்று. ஆகவே பெரிய ஸேனாஸமூகத்தைத் திரட்டிக்கொண்டு அந்தக்காலத்தில் நாகரீகத்தில் சிறந்து விளங்கினதும், ஆபிரிக்கா கண்டத்தின் வடகீழ்ப்பாகத்தில் உள்ளதும், நைல் என்ற நதி பாய்ந்தோடுவதாய் நீர்வள மிக்கதும், ஸ்வபாவத்தி லில்லாவிட்டாலும் நைல் கொண்டுவந்து ஏராளமாய்ச் சேர்ப்பிக்கும் வண்டலின் ப்ரபாவத்தால் நிலவளமிக்கதாகவும் விளங்கின ஈஜிப்ட் தேசத்தின்மீது படையெடுத்து காம்பைஸீஸ் சென்றான். அத்தேசத்தை ஜயிப்பது அவருக்கு ச்ரமஸாத்தியமான கார்யமாகவில்லை; அதாவது வெகுசுலபமாய் அந்ததேசத்தை பாரஸீகராஜ்யத்தின் ஒருபாகமாக்கிக்கொண்டார். அத்தேசத்திலேயே சிறிதுகாலம் தங்கவும் தங்கினார்.

அந்தக்காலத்தில்ஈத்தியோபியாதேசத்தின் பெருமைகள் அவர்காதில்விழுந்தன. மிகுந்தஐச்வர்யம்கொழிக்கும்தேசம் அது. ஆப்ரிக்காகண்டத்தின் மத்தியப்ரதேசத்துக்கு அக்காலத்தில் 'ஈத்தியோப்பியா' என்று பெயர் வழங்கிவந்தது. நம்புதற்கொண்ணாதபடி பெருஞ்செல்வம்படைத்த வொரு தேசத்தைப்பற்றிக் கேள்விப்பட்ட எந்த வீரனுக்குத்தான் அந்ததேசத்தைக்கைப்பற்றவேண்டுமென்ற எண்ணம் உண்டாகாது. இவ்விஷயமாய் தீவ்ராலோசனை செய்யும்பொழுது அத்தேசத்தின் ஸூக்ஷ்மங்கள், சித்ரங்கள், அதையடையும்மார்க்கங்கள், இன்னும்அவச்யமான விஷயங்கள் முதலியனவற்றை யறிந்துவருதற்பொருட்டு சில ஒற்றர்களை யனுப்பவேண்டுமென்று தீர்மானித்தான் காம்பைஸீஸ். அப்பொழுதவன் சில நுட்பபுத்தியுடைய ஒற்றர்களைத் தருவித்து அவர்களை ராஜதூதர்களாக்கி அநேகம் காணிக்கைப்பொருள்களை யவர்களிடங்கொடுத்து ஈத்தியோபிய நாட்டரசனு

* இதனை ப்ரதிபாசக்தி யென்பர் வடநூலார்.

(24-ம் பக்கத் தொடர்ச்சி.)

குறைத்திடிற் சிறியனே னுய்வேனெ—னுமாயை
யுன்னைத் தடுத்த வாறே
வேழிகர் கலிகாலக் கொடுமையோ யாதனது
வேட்கையுள மறியனம்ம!
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கி றைவியே. 11.

ஆதிநா யகிவிமல போதநா யகிமந்த்ர
மானநா யகிநித்திய
வறிவினா யகிமென்ன குறியினா யகியின்ப
மருளுநா யகி மங்கல
நாதநா யகிமகா பூதநா யகி மகிமை
நண்ணு விற் பனநா யகி
நாற்பத்து முக்கோண நடுவிலுறை நாயகி
நவரசவ லங்கா ரசங்
கீதநா யகிநளின யிதநா யகியுதை
கிரணநா யகியற் புதக்
கீர்த்திநா யகிமிகுமெ தார்த்தநா யகியமுத
கிரநாயகி சத் திய
வேதநா யகியென்று மாதவர்க ளநுதினம்
வேண்டுமெடி பரச வருள்வாய்
வெண்டாம ரப்பலணங் கொண்டான்ம கற்குரிய
வெண்டாம ரைக்கிறைவியே. 12

எஸ். வேலாயுத முதலியார்.

டைய ஸ்நேகபந்தத்தை விரும்பிய ஒரு அரசன் அனுப்புவதுபோல் அவர்களையனுப்பி வைத்தனன். அவர்களிடம் அனுப்பப்பட்ட காணிக்கைப்பொருள்கள் என்னவென்றால்:—ஊதாச்சாயம் கொடுக்கப்பட்ட ராஜரீக உடையொன்று; கழுத்தி லணிந்துகொள்ளுவதற்குயோக்கியமான தங்கச்சங்கிலிபொன்று; தங்கக்கங்கணங்கள் ஒருஜோடி; வாஸனைத்ரவ்யம் அடங்கிய பெட்டியொன்று; தென்னைச்சாரிலிருந்து செய்யப்பட்ட முதல் தரமான சாராயபிதிலியொன்று; ஆகிய இவைகளே.

ஈத்தியோப்பிய ராஜன் ஸாமான்யப்பட்டவனல்லன். காம்பைஸீஸ் இப்படி நயவஞ்சகமாக அனுப்பிவைத்த தூதர்கள் உண்மையில் இன்னகார்யத்தை யுத்தேசித்து வந்திருக்கிறார்களென்பதை ஒருநொடியில் அறிந்து கொண்டான். ஆதலால் ஸாதாரணஸ்திதியில் ராஜதூதர்களை எவ்வளவு மர்யாதையுடன் எதிர்கொண்டழைத்து உபசரிக்கவேண்டியது லோகஸாமாந்ய ரீதியோ, அவ்விதம் அவர்களை யுபசரிக்கவில்லை.

காம்பைஸீஸ் தூதர், ராஜஸந்நிதானத்தில் நின்றுகொண்டு தாங்கள் காணிக்கைகளாகக் கொண்டுவந்த பொருள்களிலொன்றாகிய நீலவர்ணங் கொடுக்கப்பட்ட ராஜரீகவுடையையெடுத்துக்காட்டவும், ராஜன் "நிரம்பசரி! உங்களரசன் மிகுந்தகெட்டிக்காரன்; என்னுடைய புத்திசாலித்தனம் எந்த மட்டிலிருக்கிறதென்பதைப் பரீக்ஷிப்பதற்காக இதைக்கொடுத்தனுப்பினன்போலும்!" என்று சொல்லி மடமடவென்று சிரித்தான். காம்பைஸீஸ் தூதுவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவர்களிலொருவன் "ஸ்வாமி? தாங்கள் சொல்லுவது விளங்கவில்லையே" என்றான்.

ராஜன், "ஆம் உங்களுக்கு விளங்காது; இப்பொருள்களை யனுப்பிய காரணம், அரசன் உங்களிடம் சொல்லியிருக்கமாட்டானல்லவா? இவ்வுடையை யவர் அனுப்பியதின் காரணம் நான் சொல்லட்டுமா? இதன் ஸ்வபாவ வர்ணமாகிய வெண்மை தெரியாதிருக்கும்படி எப்படி நீலவர்ணமேற்றப்பட்டிருக்கிறதோ அதே ப்ரகாரமாக, உங்களுடைய அரசன் தன்னுடைய நிஜமான எண்ணம் வெளியே தெரியாதிருக்கும்படி உங்களைத் தூதுவர் என்ற வ்யாஜங் காட்டியனுப்பிவைத்திருக்கிறான். கூடுமானால் இவ்விஷயத்தை நான் அறிந்துகொள்ள வேண்டுமென்பது உங்களரசன் கருத்து. விளங்கிற்றா இப்பொழுது?" என்றான்.

தூதுவர் திடுக்கிட்டனர். அரசனுடைய புத்தி யூகத்தைக்கண்டு மலைத்தனர். இருந்தாலும் தாங்கள் கண்டு பிடிக்கப்பட்டதை வெளியிடவில்லை. பிறகு அவர்கள் தங்கச் சங்கிலியையும் கங்கணங்களையும் எடுத்து அரசனிடம் கொடுத்தனர். அரசனுக்கு அந்தச்சங்கிலியும் கங்கணங்களும் விலங்கிற்கு அறிகுறிகள் என்று தோன்றவே, அவன் சிரித்து, "ஸரிதான்; அது ஸரிதான்; இவைகளைக் காட்டிலும் பெரிதும் உரப்புள்ளவுமானவை வெகுவாகக்கிடைக்கும் எங்களிடத்தில். ஈத்தியோப்பியாவில், தங்கம் விசேஷமாக அகப்படக்கூடிய பொருள் என்றும் அதனாலேயே, இத்தேசத்துக் கைதிகளுக்குக்கூட ஸ்வர்ணமயமான விலங்குகளேயிட்டு வருகிறோமென்றும் உங்கள் அரசனுக்குத் தெரியாதுபோலிருக்கிறது! நீங்கள் போய்ச் சொல்லுங்கள்" என்றான்.

தூதர்கள் சாராயப்பிதிலியையெடுத்துக் காண்பிக்கவும், அரசன் "எங்களுடைய தேசத்தில் இது கொஞ்சம் அபூர்வந்தான். இதனுடையசக்திஎங்களுக்குநன்றாகத்தெரியும். இதையுட்கொள்ளுவதனால் சரீரபலம் நாளுக்கு நாள் குறைவுபடுமென்பதையும் நாங்களறிவோம். ஆயினும் அதனுடைய ருசியைக்கண்டு நான் மோசம் போவேனென்று உங்களரசன் நினைத்திருந்தால் அப்படி நினைத்தது தவறென்று அவனிடம் நீங்கள் போய்ச்சொல்லுங்கள்" என்று இவ்வாறு அவர்கள் அரசனுக்குக் கொண்டுவந்த காணிக்கைப்பொருள்கள் ஒவ்வொன்றையும் தோஷங்கூறி வேண்டாமென்று மறுத்துவிட்டான்.

ஸபை கலையும் நேரமாயிற்று. அரசன் தூதுவர்களை யழைத்துக்கொண்டு ஸபையை விட்டகன்றான். ஊருக்கு வெளியே வெகு ரமணீயமான வொரு ப்ரதேசத்தில் சுத்த ஸ்படிகம் போல் தெளிவுற்ற தண்ணீர் கொப்பளித்து வரும் ஓருற்றண்டை யவர்களை யழைத்துக்கொண்டுபோய் நிறுத்தி, ராஜன் "தூதர்களே! இங்கு ஏதாவது நூதனமான வாஸனை வருகிறதா? நிதானியுங்கள்." என்றான்.

"ஆம். நீலோத்பலங்களின் வாஸனை" என்றார் தூதர்.

"எங்கிருந்து வருகிறது தெரிகிறதா?"

"இந்த ஊற்றின் ஜலத்தினிடையே யிருந்து தான் வருகிறது."

"வாஸ்தவம். இவ்வூற்றின் ஜலத்தினுடைய ப்ரபாவம் உங்களுக்குத் தெரிந்திருக்க நியாய மில்லை. இது தீர்க்க ஜீவன் கொடுக்கக்கூடியது. ஈத்தியோப்பியர் தினந்தோறும் இதிலேயே மூழ்கிவருகிறார்கள். அதனால் அவர்கள் சரீரம் திடப்படுவதுடன் அரோகிகளாய் தீர்க்க ஜீவி களாய், இருந்து வருகிறார்கள். இங்கிருப்பவர் ஒருவரும் நூற்றிருபது வயதாவதற்கு முன் இறப்பதில்லை. இந்த விசேஷங்களையும் உம்மு டைய அரசனிடம் போய்ச்சொல்லுங்கள்" என் று ஈத்தியோப்பியா அரசன் சொன்னான்.

பிறகு எல்லோரும் அரண்மனைக்குத் திரும் பினார்கள். தூதர்கள் அரசனிடம் உத்திரவு பெறும் வேலை, அரசன், "இன்னொன்று; உங்க ளரசனுக்கு நானொரு காணிக்கை கொடுத்தனு ப்புகிறேன்" என்று சொல்லி, உள்ளேசென்று ஒரு பெரிய வில்லொன்றை யெடுத்துவந்து, அவர்களிடம்கொடுத்துப் பின்னும் "இதுதான் நான் சொன்ன காணிக்கை. இந்த வில்லை யெடு த்துப் பாரஸீகர்கள் எப்பொழுது ஸுலபமாய் நாணேற்றி, சரஸந்தானம் செய்ய சக்தியுடைய வராக ஆவாரோ, அப்பொழுது ஈத்தியோப்பி யாவின் மீது படையெடுக்கத்தக்க ஸமயம் வந்ததென்று எண்ணலாகும். அதற்கு முன் படையெடுத்தால், தீர்க்கஜீவிகளான ஈத்தி யோப்பியர்கள் கையில் பாரஸீகர் அவமான மடைவது நிச்சயம் என்று உங்களரசனிடம் நான் சொன்னதாகச் சொல்லுங்கள்" என்று ரைத்து அவர்களைப் போகவிடுத்தான்.

ஒன்றன் மேலொன்றாய்த் தாங்கள் கண்ட தும் கேட்டதுமான ஆச்சர்யங்களைத் தூதுவர் வந்து காம்பைஸீஸ் அரசனிடம் தெரி வித்தார்கள். ஈத்தியோப்பியரின் தன்மைகளைத் திருட்டுத்தனமாய்த் தெரிந்து வரும்படியனுப் பியத் தூதுவர்களுக்கு, அவர் தன்மைகளையும், பலத்தையும், பலம் கிடைத்த வழியையும் முத லிய பல விஷயங்களையும் பஹிரங்கமாய்க்காட் டிக்கொடுத்த ஈத்தியோப்பிய ராஜன்மீது காம் பைஸீஸ் மிகுந்தகோபம் கொண்டான். அவன் கொடுத்தனுப்பிய வில் ஸாமாந்யமாய் ஸைந் யத்திலுள்ள ஒவ்வொரு ஈத்தியோப்பியனும் உபயோகப்படுத்தும் ஆயுதம். அதைப் பா ரஸீக ஸைந்யத்திலிருந்த மிகுந்த பலசாலியும் ஸரியாக எடுத்து நிலை நிறுத்த முடியவில்லை; நாணேற்றுவதும் சரஸந்தானம்செய்வதும் அப் புறமிருக்கட்டும். அவைகளைக் கண்கூடாகக் கண்டகாம்பைஸீஸ் ஈத்தியோப்பியர்களைஜயிப் பது தன்னாலாகாத கார்யமென்று உடனே மதித்திருக்கவேண்டியது.

அப்படிக்கன்றி, தன்னுடைய ஸேனைகளைத் திரட்டிக்கொண்டு, யுத்த ஸந்நத்தனாகப் புறப் பட்டு விட்டான் ஈத்தியோப்பியாவை நோக்கி.

ஆனால் ஈத்தியோப்பியாவை யடைந்து, அங்கே யவமானமடையும்படி கடவுள் அவனை விடவில்லை. ஆப்ரிக்காவின் மத்தியப்ரதேசத்தை யடைவதற்கு முன்னம், விஸ்தாரமான மணல் நிறைந்த பாலைவனங்களைக்கடக்கவேண்டியிருப் பதுதானுங்களுக்குத் தெரியுமே. அப்பாலை வனங்களில் வெகு பெயர்கள் இறக்கும்படி நேர்ந்தது. இதைக்கண்டு அதைர்யமடைந்து, மீதமிருந்த ஸ்வல்பமனிதர்களைத்திருப்பி பழை த்துக்கொண்டு மறுபடி ஈஜிப்ட் வந்து சேர்ந் தான். இப்படியாயிற்று ஈத்தியோப்பியா படை யெழுச்சியின் இறுதி.

ஈஜிப்ட் தேசத்தார்களின் இக்காலத்திய நாகரீகம் தாழ்ந்தபடியிலிருந்தது. அவர்களு டைய பழக்க வழக்கங்களில் முக்கியமாய்மதவி ஷயமான கோட்பாடுகளும் ஆசாரங்களும், நாக ரீகம் மிகுந்த தற்காலத்தியவர்களுக்கு நகைப் பிற்கு இடங்கொடுக்கத் தக்கனவாயிருக்கும். உலகத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஸகலப்ராணி களையும் அவர்கள் தெய்வமாகக் கொண்டாடி னார்கள். எலி, பூனை, மாடு, மூஞ்சூறு, முதலி ய ஸகல ப்ராணிகளும் அவர்களுக்குத் தெய்வ ந்தான். முதலைகளைக் கூட தெய்வமாக நினை ந்து வழிபாடு செய்துவந்தார்கள். இப்படியவர் கள் தெய்வமாக பாவித்த ப்ராணிகளுள் நிரம்ப முக்கியமானதும் முதன்மைஸ்தானம் வஹி த்ததுமாக விருந்தது, சிற்சில சரீரலட்சணங்

இராமாயணத்தில் ஸீதையை விவாஹம் செய்து கொள்ளுவதற்கு சிவதநுஸ்ஸை நாணேற்றி சரஸந்தா னம் செய்வதைப்பந்தயமாக வைத்திருந்ததையும், ஸீதாராமவிவாஹமாகி அயோத்திக்குத் திரும்பி வரும் வழியில் பரசுராமர் எற்பட்டு ஸ்ரீராமரிடம் வைஷ்ணவதநுஸ்ஸை நீட்டி "இதை நீ வளைத்துவிடு வாயானல் நான் உன்னால் ஜயிக்கப்பட்டதாக வொப்பு க்கொள்ளுகிறேன்" என்று பரசுராமர் சொன்ன தையு மிங்கு ஒப்பிட்டுப்பார்க்க.

களோடு கூடிய பசுங்கன்று. அது முற்றிலும் கறுப்பாகவிருக்கவேண்டும். அதனுடைய நெற்றியில் சதுஷ்கோணகாரமாய் ஒரு வெள்ளைச் சுட்டியுமிருக்கவேண்டும், அதன் பின் பாகத்தில் அப்படியே பருந்து போன்ற உருவமுள்ள ஒருவெள்ளை விழுந்திருக்கவேண்டும். இப்படிப்பட்ட *லக்ஷணலக்ஷிதமானஒருபசுங்கன்றுகாணப்படும் பட்சத்தில் அதையொரு கடவுளின் அவதாரமாகவே ஈஜிப்தியர்எண்ணியிருந்தனர்.

அன்றியும் அது எந்த தேசத்தில் காணப்படுகின்றதோ, அத்தேசம் உத்தரோத்தராபிவ்ருத்தியாய் விளங்குமென்பது மிவர்கள் நம்பிக்கை.

காம்பைஸீஸ் ஈஜிப்ட் தேசத்திலிருந்து வருநாளில், இப்படிப்பட்ட கன்றொன்று காணப்பட்டது. இதைக்கண்டதும் அத்தேசத்தாருக்கிருந்த ஆநந்தத்திற்குக் கணக்கேயில்லை. காம்பைஸீஸ் இதைப்பற்றிக்கேள்விப்பட்ட உடனே அக்கன்றைத் தன்முன்னிலைக்குக்கொண்டுவரும்படி ஆக்ஞாபித்தான். அரசன் முன்னால் கன்று கொண்டுவந்து நிறுத்தப்பட்டதும் காம்பைஸீஸ் சிரித்து "இதுதா னுங்கள் தெய்வமோ?எங்கே உங்கள் தெய்வம் தன்னையே காப்பாற்றிக்கொள்ளட்டும்; பார்ப்போம்" என்று சொல்லி, தன்னரையில் பிணிக்கப்பட்டிருந்த உடைவாளையுருவி, அக்கன்றின் அடித்தொடையில்குத்தியதைக்கொன்றுபோட்டான் அவனே அரசன். அவனையாரென்னபண்ணலாம். வேறு யாராவதாகவிருந்தால் அந்த நிமிஷமே ஈஜிப்தியர் அவனைப்பொடியாகச் செய்திருப்பார்கள். இந்த மஹாபாபத்தாலேதான் காம்பைஸீஸ் சித்தப்ரமம்கொண்டான் என்று அந்தநாட்டார் வாதிக்கின்றனர். அதற்குக்காரணம் எப்படியாயினுமாகுக; அவன் பிற்காலத்தில் செய்த செய்கைகள் முழுவதும் சித்தப்ரம்மம் கொண்டவன் செய்யும் செய்கைகளாகவே யிருந்தன. தன்னுடைய ஸஹோதரனை ஸ்மர்டிஸ்என்பவனைக்குத்திக்கொன்றான். அவனுடையபஸஹோதரிக்கும் அதேமாதிரியான கதி கிடைத்தது. தனக்குப்ராணபதமாகவிருந்த ஒருஸ்நேகிதனுடைய சிறுகுழந்தையொன்றை அம்பாலடித்துக்கொன்றான். இதற்குக் காரணமொன்றுமில்லை. தான் மிகுந்த குறிப்பாளி என்பதைக்காட்டுவதற்காகவே அக்குழந்தையை அம்பாலடித்தது!

இப்படி யநேகநாட்கள், அநேக மாதங்கள், அநேக வருஷங்கள் சென்றன. ராஜ்யம் அல்லோல கல்லோலமாயிற்று. ஒருவனுக்காவது நாம் அடுத்தநிமிஷம் உயிரோடிருப்போம் என்ற நிச்சயம் கிடையாது. கடைசியாய்க் கடவுள் கண்திறந்தார். காம்பைஸீஸ் ஒருஸமயம் அவஸரமாய்க் குதிரையின் மீதேறினான். அவனுடைய கத்தியிடப்பட்டிருந்த வுறை, குதிரைக்கும் அவ னிருப்பிடத்திற்கும் நடுவில் நசுங்கிப்பிளந்து இரண்டாய் விழவே, கத்தி அவனுடைய அடித்தொடையில் பதிந்து, அவனுடையமரணத்தை ஸம்பாதித்துத்தந்தது. ஆதியில் பசுங்கன்றை அவன் எந்த விடத்தில் குத்திக்கொன்றானோ அதேயிடத்தில் அவனுடைய சரீரத்தில் கத்தியேறி காம்பைஸீஸ் இறந்தான் என்று சொல்லப்படுகிறது.

நீங்கள் சிரிக்கிறீர்கள்! ஆம். வாஸ்தவம் தான். அது ஏதோ தற்செயலாய் அந்தவிடத்தில் பட்டது! கன்றைக்கொன்றதற்காகவோ?" என்று நினைக்கிறீர்கள். அதென்னவோ எனக்குத்தெரியாது. அதுகடவுளுக்குத்தான் தெரியும். ஆனால் நானொரு கேள்விகேட்கிறேன். அவனுக்கேன் அப்படிப்பட்டமரணம் நேரவேண்டும்? ஏன் அதே இடத்தில் கத்தி ஏறவேண்டும்? எனக்கென்னவோ அது தெய்வதண்டனையாகத்தான் தோன்றுகிறது. ஆனால் இதெல்லாம் அவரவர் மனதின்போக்கைச் சேர்ந்ததென்பீர்கள், அவரவர் விச்வாஸநிலையைப் பொறுத்ததென்பீர்கள். அது வாஸ்தவம்தான். ஆனால் இவ்வழியில் விச்வாஸம் (Faith) வைத்திருப்பதற்காக நான் வெட்கமடைய வில்லை.

இவ்விதம் ஆழ்ந்த யோசனைசெய்ய விடங்கொடுக்கிறமட்டிலாவது இந்த சித்தப்ரமைகொண்ட காம்பைஸீஸ் சரித்திரம் உபயோகப்படட்டுமே!.

T. R. S. சாஸ்திரி, பீ. ஏ.

---

* இப்படியே அச்வமேதத்திற்கு யோக்கியமான குதிரைகளின் வர்ணம், இதரலக்ஷணங்கள் முதலியன நம்முடைய சாஸ்த்ரங்களிலும் கூறப்படுகின்றது. இப்படிப்பட்ட லக்ஷண லக்ஷிதமான குதிரையொன்று கிடைத்து, ஒருவன் யாகம் செய்வானானால் அவனுக்குமிகவும் மேலானபதவி ஸ்வர்க்கத்தில் கிடைக்கிறதென்பது சாஸ்த்ரங்களின் துணிவு. இவ்வகைப்பட்டன மிகவும் அரிதாதல்பற்றி இவைகளுக்கு இத்துணை மஹிமை ஏற்பட்டனவோ என்னவோ!

# மஹாபாரதக் கதைகள்
## STORIES from MAHABHARATA
### இந்திரனும் கச்யபரேன்ற பிராமணனும்

குலம், கர்மா, தானம், விவேகம் இவைகளுள் எது மனிதனுக்கு உத்தமமான பதவியைக் கொடுக்கக்கூடியதென்று தர்மபுத்திரர் கேட்க, பீஷ்மர் பின்வரும் கதையைக் கூறுகிறார்.

செல்வ மதம் கொண்ட வைச்யர் ஒருவர் வண்டியில் விரைவாய் ஸவாரி செய்கையில் வழியில் நின்ற ஒரு ஏழை ப்ராமணன் பேரில் வண்டியை ஏற்றி அவரைக் கீழே தள்ளிவிட்டார். கச்யபர் என்ற மேற்சொல்லிய பிராமணன் தபஸில் சிறந்தவர். ஆகிலும் வெகு ஏழை. தன்னுடைய ஏழைத்தன்மையினால்தான் மேற்கண்ட அவமானம் தனக்கு நேரிட்டதென்று எண்ணி ஏழையும் உயிரை வைத்துக்கொள்ளலாமா வென்று துராக்ரஹப்பட்டுக்கொண்டு ஹடமாய் உயிரைவிட்டுவிட நிச்சயித்து அந்நம் தண் இல்லாமல் கிடந்தார். இதை அறிந்த இந்திரன் ஒரு நரிரூபமாய் அவரிடம் வந்து பின் வருமாறு சொல்கிறார்.

"ஸகலப் பிராணிகளும் மனுஷ்ய ஜந்மம் எப்பொழுது கிடைக்குமென்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. மனிதனிலும் பிராம்மண ஜன்மத்தையே மிகவும் கொண்டாடுகிறார்கள். நீர் மனுஷ்ய ஜந்மத்தைப் பெற்றுப் பிராம்மண குலத்தில் பிறந்து வேதசாஸ்திரங்களை நன்றாய் கற்றுணர்ந்தவராயும் இருக்கிறீர். இவ்விதம் அடையக்கூடாத பதவியை அடைந்தும் ஏன் வீணாய் உயிரைமாய்த்துக்கொள்கிறீர்? மனிதனுக்கு இருப்பது போல் கைகால்கள் இல்லாததினால் என்னைப் போன்ற பிராணிகள் படும் கஷ்டம் சொல்லிமுடியுமா? தேகத்தில் முள் தைத்தால் எடுக்க முடியவில்லை. ஈ எறும்பு கடித்தால் அவைகளை நிவர்த்திக்க முடியவில்லை. வெயில் மழைக்குத் தங்கும்படியான வீடுகள் கட்டிக்கொள்ளமுடியவில்லை. நீர் எவ்வளவோ புண்யங்களைசெய்து நரி, க்ருமி, பாம்பு, தவளை முதலிய பாபயோநிகளில் பிறக்காமல் உத்தமமான மாநிடஜன்பத்தை அடைந்திருக்கிறீர். இதோ என்னைக்கடித்துக்கொண்டிருக்கும் பூச்சிகளை ஒட்டமுடியாமல் கஷ்டப்படுகிறேன். இந்த உயிரை மாய்த்துக்கொண்டால் இதைக்காட்டிலும் இழிவாய் உள்ள எண்ணிறந்த ஜந்மங்களில் எது வாய்க்குமோ என்று பயந்து, நான் உயிரைவைத்துக் கொண்டிருக்கிறேன். மனிதனுடைய ஆசைக்கும் அளவுண்டா? தனமில்லை என்று இப்பொழுது நீர் வருந்துகிறீர். தனமிருப்பவன் அரசனாகப்பிறக்கவில்லையே என்றும், அரசன் தேவதையாகப் பிறக்கவேண்டுமென்றும் பிறகுதேவர்களுக்கெல்லாம் அரசனாகிய இந்திரனுடைய பதவியை அடைய வேண்டுமென்றும் விரும்புவான். பணமிருந்தாலும் ஸுகம்கிடைப்பதுநிச்சயமில்லையே. ராஜ்யபதவியில் இருப்பவனும்மேலான ராஜாவுக்குக்கீழ்ப்படிந்துகப்பங்கட்டிக் கொண்டு மனதில் க்லேசம் அடைவதை நாம் பார்க்கிறோம். மேலும் தனவான்கள் பலவிதமான நோய்களால் வருந்துவதில்லையா? ஆகையால் அவனவன் தன்னுடைய கர்மபலனை அமைந்த பிறப்பையும் நிலமையையும் இகழ்ந்து கொள்ளாமல் மனதைச் சமாதானப் படுத்திக் கொள்ளவேண்டியதுதான் உசிதம். ஆகையால் நீர் உடனே எழுந்திருந்து உம்முடைய தர்மங்களை அநுஷ்டிக்கவேண்டும். வேதத்திற்சொல்லிய தர்மங்கள் நற்பயனை அளிக்காமல் வீண் போகா. வேதத்திற்சொல்லிய தர்மங்களை அநுஷ்டிக்கக்கூடிய பதவி புண்யம் செய்தல்லவோ பெறக்கூடியது: நான் முன் ஜன்மத்தில் தர்க்க சாஸ்திரத்தைக் கைப்பற்றி வேதத்தை நிந்தித்து எப்பொழுதும் ஹேதுவாதங்களை செய்துகொண்டு நாஸ்திகனாயும் ஒன்றிலும் நம்பிக்கையில்லாமல் எல்லாவற்றிலும் சங்கித்துக்கொண்டு, விவேகமற்றவனாயிருந்தும் ஒருபெரியபண்டிதனாக எண்ணங்கொண்டு காலத்தை வீணாக்கினேன். அதனால் இந்த நரி ஜந்மம் எனக்குக் கிடைத்தது. திரும்பவும் மனிதனாய்ப்பிறந்து யக்ஞம், தானம், தபஸ் இவைகளை செய்துகொண்டு விலக்கவேண்டிய வஸ்துக்களை விலக்கி, அறியவேண்டியபொருளை அறிந்து மனதில் ஸந்துஷ்டியோடுஎப்பொழுது இருப்பேனென்று இரவும்பகலும் கவலையோடு இருக்கிறேன்."

மேற்சொல்லிய வார்த்தைகளைக்கேட்ட கச்யபரென்றபிராமணன் உடனே எழுந்து, தன்னுடன் பேசின நரி இந்திரன் என்று ஞான திருஷ்டியால் தெரிந்துகொண்டு அவருக்கு விதிப்படி பூஜைசெய்துவிட்டுத் தன் வீடுசென்றான்.

G. S. கிருஷ்ணஸ்வாமி ஐயர், பீ. ஏ.

## தசைகள், நரம்புகள், தோல்
### MUSCLES, NERVES & SKIN

போலீஸ்காரர்கள் தலைப்பாகை கட்டுவதற்காதாரமாக, அடியில் ஒரு சிறு கூடை அல்லது நெட்டிக்கூடு ஒன்று கொடுக்கப்பட்டிருக்கிறதல்லவா? அதன் பிரயோஜனம் என்னவென்கிறீர்கள்? தலைப்பாகைக்கு பார்வைகொடுப்பதற்கு நிரம்ப முக்கியமான, துணி மிருதுவாகையால், அது விரைப்பாய் நிற்கவேண்டியதற்காக ஆதாரமாய் அவைகளிருக்கின்றன. அப்படியேதான் நம்சரீரத்தின் எலும்புக்கூடும். அதை ஆதாரமாகக்கொண்டுதான் மனிதசரீரத்தின் அமைப்பு நிர்ணயிக்கப்படுகின்றது. எப்படித் தலைப்பாகைக்குத் துணியோ, அவ்விதமே நம்முடைய எலும்புக்கூட்டிற்கு மாம்ஸ மேதஸ்ஸாதிகள். இன்னும் பாருங்கள். இந்த நெட்டியால் தயாரிக்கப்பட்ட தலைக்குட்டைகளின் மேலுள்ள துணிகளை யவிழ்த்துவிட்டோமானால், அடியிலிருக்கும் நெட்டி சொர சொரப்பாயும் பார்வைக்குக் காடுமுரடாயுமிருக்கிறது. மிருதுவான துணியை வேண்டிய இடங்களில் மெத்தையாகக்கொடுத்து மேலே இழுத்துத் தைப்பதனால் தலைப்பாகைக்குக் கௌரவமான தோற்றம் உண்டாகிறது. அப்படியே, இந்த எலும்புக்கூடும் பார்வைக்கு எவ்வளவு அவலட்சணமாக விருந்தாலும், மனித சரீரமானது எவ்வளவு அழகாயும், அமைப்பாகவும் பார்ப்பதற்கு மனோகரமாகவுமிருக்கிறது பாருங்கள். இவ்விதம் இவ்வெலும்புக்கூட்டை அழகுபடுத்துவதென்னவென்கிறீர்கள்? இவ்வெலும்புக்கூட்டை முற்றிலும் மூடி மேடுபள்ளங்களை ஸமமாக்கிவைப்பது தசை நார்க்கூட்டங்களும், நரம்புகளும், தோலுமே.

இதுவரை நாம் பேசிவந்த தலைப்பாகைக் கூட்டிற்கும் சரீர எலும்புக்கூட்டிற்கும் ஒரு முக்கியமான பேதமுண்டு. எலும்புக்கூடானது சேதனமுள்ள சரீரத்தின் மத்தியிலிருப்பதனால் அதுவும் சேதனமுள்ளதாகக் காணப்படுகிறது. அதாவது இந்த எலும்புக்கூட்டிற்குப்பிறப்பு, வளர்ச்சி, முதிர்ச்சி, அழிவு, சலனம் ஆகியகார்யங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளுக்குள் இந்தப் பிரஸக்தியில் நாம் கவனிக்க வேண்டியது எலும்புக்கூட்டின் ஸ்வதச்சலனமே*; அதாவது தானாக அசையும் சக்தியே. ஆனால் இதற்குண்மையில் தானாக அசையும் சக்திகிடையாது. இனிமேல் நாம் விவரித்துச் சொல்லப்போகிற மூளைமுதலியவைகளின் கட்டளையை யொத்துநடப்பனவாகும். இத்தசைநார்களின் ‡ ஸ்வாதிஷ்டிதமான (தம்மிடத்துள்ள) ஓர் சக்தியினாலேயே இவ்விதசலனம் ஏற்படுகிறது. அதெப்படியென்று கவனிப்போம்.

நம்மேலே போர்த்தப்பட்டிருக்கும் தோலை உரித்துவிடுவோமானால், கீழே ரக்தவர்ணமுள்ள மாம்ச பிண்டங்கள் கண்களுக்குப் புலப்படும். ஆனாலிவ்விரக்தவர்ணமானது அந்தமாம்ஸங்களுக்கு ஏற்பட்ட சுபாவவர்ணமல்ல. பின் அவைகளினூடே செல்லும் ரக்தத்தின்வர்ணமாகும். இவ்வுண்மையை நாம் வெகுசுலபமாய் அறிந்துகொள்ளலாம். எப்படியெனில், இந்த மாம்ஸத்துண்டங்களை எடுத்து ஜலத்தில் போட்டு வைத்திருப்போமானால் அவைகளிலுள்ள ரக்தமானது ஜலத்தில் சுவறிவிடும். பிறகு அந்தமாம்ஸங்களை எடுத்துப் பார்ப்போமானால் வெண்மையாகத் தோற்றும்.

மேலும், தோலுரிக்கப்பட்ட சரீரத்தில் நாம் கவனிக்கவேண்டிய பாகம் இன்னுமொன்றுளது. அதாவது சரீர ஸந்திகளில், எந்த ஸந்திகளுக்கு அதிகமான சலனம் வேண்டியிருக்கிறதோ, அவ்விடங்களில் அடர்த்தியாகவும் நீளமாகவும் மாம்ஸபிண்டங்கள் காணப்படுகின்றன. எவ்விடத்தில் வெகுசொல்பமான அசைவும் அவசியமில்லையோ (மண்டையோட்டுக்கும் தோலுக்கும் நடுவிலும், மண்டையோடுகளுக்கிடையிலும்) அவ்விடத்தில் வெகுசொல்பமாக இந்தமாம்ஸம் வைக்கப்பட்டுளது. இதற்குக்காரணம் சரீரத்தின் எவ்விதமான சலனமும் எலும்புகளின் சலனத்தாலும், அவ்வெலும்புகளின் சலனம் மாம்ஸங்களின் சலனத்தாலும் உண்டாகின்றன என்பதுதான். அதிக வேலைசெய்யவேண்டிய இடங்களில் அதிகமாகவும்சொற்பவேலை செய்யவேண்டிய இடங்களில் சொல்பமாயும் இந்த மாம்ஸங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இனி, இவ்விதசலனத்திற்குக் காரணமான ஒவ்வொரு மாம்ஸத்துண்டையும் ஒவ்வொரு

* ஸ்வத: தானாகவே, சலநம்-அசைதல்.

‡ ஸ்வ- தன்னிடத்திலேயே, அதிஷ்டிதமான-வைக்கப்பட்டுள்ள.

தசையென்று விவகரிப்போம். இவ்விதத் தசைகளில் குறைந்தபட்சம் 500 தசைகள் வரை நம்முடைய சரீரத்தில் வைக்கப் பட்டிருக்கின்றன. தோலுரித்த பெரியபடத்திலாவது நிஜ மனித சரீரத்திலாவது உற்றுப்பார்ப்பீர்களானல், தொடை முதலிய பலம் பொருந்திய பாகங்களில் இத்தசைகளில் அநேகம் ஒன்ருகச் சேர்க்கப்பட்டு, அந்த எலும்புகளின்பேரிலும் மற்ற இடங்களில் அவ்வவ்விடங்களுக்குத்தகுந்த பலமிருக்கும்படி ஒன்று இரண்டு அல்லது அதிகம் தசைகள் எலும்புகளுக்கிடையுமாகச் சேர்த்துக் கட்டப்பட்டிருப்பதைக் கவனிக்கலாம்.

மனித சரீரம் அல்லது வேறு ஏதாவது பிராணியின் சரீரத்திலிருந்து ஒரு துண்டு மாம்ஸத்தை எடுத்துக்காயவைத்துப் பிறகு அணுதர்சனி*யைக் கொண்டாவது அல்லது கவனமாய் உற்றுப்பார்த்தாவது நோக்கினல் ஒவ்வொரு மாம்ஸ பிண்டத்திலும் அநேகம் சிறுதசைகள் இருப்பது காணப்படும். இத்தசைகள் நடுவில் தடிமனுயும் ஓரங்களில் மெல்லிதாயுமிருக்கும்படி நடுவிலிருந்து கரைந்து வருவதாகக்காணப்படுவதோடு, தசையின் ஓரங்கள் மற்றபாகங்களைப்போல் மிருதுவான மாம்ஸங்களாகவிராமல் கெட்டியானவைகளாய் நாம் முன்னே சொல்லியிருக்கும் ஸந்திபந்தனநாடாக்களைப்போலிருக்கின்றன. இவைகளுக்கு டெண்டென்ஸ் (Tendons) என்றுபெயர். இவைகளைக்கொண்டுதான் தசைகள் எலும்புகளில் கட்டப்படுகின்றன. இத்தசைகளில் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே (அதாவதுமற்ற தசைகளின் சம்பந்தமில்லாமல்) சலிப்பதற்கு சக்தி ஏற்பட்டிருக்கிறது. இப்படி அநேகம் தசைகள் சேர்ந்து கட்டுக்கட்டுகளாக நம்முடைய சரீரத்தில் அநேகவிடங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன. இக்கட்டுகளுக்குத் தசை சமூகம் (Muscles) என்று பெயரிடுவோம்.

---

* அணு—வெகு சிறிய துளி. தர்சனி—பெரிதாகக் காட்டும் கண்ணுடி (Microscope)



# மாணவர் பக்கங்கள்

## STUDENTS' PAGES

### 1. ஆத்திசூடி விளக்கம்

### 40. கைவினை கரவேல்

கைத்தொழிலை மறைக்காதே என்பது இதன் பொருள். கைத்தொழில் என்ற சொல்லுக்கு ஜீவனத்திற்காக மாத்திரம் என்று செய்யப்படும் உபயோகமான காரியம் என்றும், தான் அவசியம் செய்யவேண்டிய கடமையான லௌகிக வைதிகத்தொழில்கள் என்றும் பொருள் கூறலாம். இதனல் ஜீவனத்திற்காகச் செய்யவேண்டிய தொழிலைவிடாது செய்ய வேண்டும் என்ற லௌகிகப் பொருளும்: கர்மானுஷ்டானம் ஈச்வர பக்தி முதலியவைகளை எப்பொழுதும் விடக்கூடாது என்ற வைதிகப் பொருளும் இந்த ஸூத்திரத்திற்கு உண்டு என்பது வெளியாகும்.

(1) ஜீவனத்தொழிலை விடாதே:—உலகில் பொதுவாக மானிடர்களுக்கு இரண்டுவிதத் தொழில் உண்டு. அவையாவன, ஜீவனத்தொழில் மனஸ் ஸமாதானத்தொழில் என்று. முன்வகையில் உழவு, ஸொத்தைப்பாதுகாத்தல், கைத்தொழில், வியாபாரம், உத்யோகம் முதலியவைகளைச் சேர்க்கலாம். பின்னதில் கற்றல், கேட்டல் முதலியவைகளைச் சேர்க்கலாம். கற்றல் கேட்டல்தான் முடிவில் மானிடர்களை அடுத்தபடியாகிய வைதிக நிலைக்குக் கொண்டுசேர்ப்பது. அது இல்லாவிடில், மானிட தேஹம் வெறும் உண்டு கழியும் யந்திரமாகப்போய்விடும். தற்காலத்திய நாகரீகம் இந்தநிலையைத்தான் ஸ்திரப்படுத்த ஏற்பட்டுள்ளது. ஆகவே, கற்றல் கேட்டலாகிய மனஸ் ஸமாதானத்தொழிலே மானிடப் பிறப்பிற்குச் சிறந்தது என்று 'கேள்விமுயல்' என்றஸூத்திரத்தில் வற்புறுத்தப்பட்ட போதிலும், அது தடையின்றி நடைபெறுவதற்கு வேண்டிய அளவு கவலையின்றி ஊண்உறக்காதிகள் கிடைப்பதற்குத் தகுந்த ஜீவனமுயற்சி அவசியம் வேண்டும். இதில் காலத்தைக் கொஞ்சம் செலவழித்துவிட்டுத்தான் மிகுந்தகாலங்களை கற்றல் முதலியவைகளில் செலவிடவேண்டும். இப்படிச் செய்தால் மனஸ்ஸமாதானத் தொழில் நன்ருக நடைபெறும். ஏற்பட்ட நல்ல பய

ளையும் கொடுக்கும். இல்லாவிடில், அதையே ஜீவனோபாயமாகவும் உபயோகிக்க வேண்டி வரும்: மனஸ்ஸமாதானம் உண்டாகாது. அதிலிருந்து ஒய்வு ஒழிவு இல்லாது பாழும் வயிற்றிற்கே உழைத்துத் தீரவேண்டி வந்துவிடும். ஆதலால் மனஸ்ஸமாதானத்திற்காக உள்ள பொது விஷயங்களை ஜீவனோபாயமாகக் கொள்ளாது, அது தனித்ததாகவே இருத்தல் வேண்டும். பொதுவான ஸமாதான காலங்களில் தேர்ந்த கற்றறிவுடையோருக்கு ஜீவனம் அவர்கள் கல்விமூலமாகவே நடந்துவிடும்; ஆனால் கஷ்டகாலம் வந்தால் இப்படி இரண்டும் சேராது. இங்கிலாந்தில் ஜான்ஸன் காலத்தில் கவிகள்பட்டகஷ்டம் சொல்லிமுடியாது. அவர்களைநன்றாக ஆதரிப்பார் இல்லை. அதில் சிலகவிகளுக்கு கடைமுதலிய ஜீவனோபாயம் வேறாகவிருந்ததால், தாம் கவிகட்டும் தொழிலையும் விடாது ஸுகமாக இருந்தனராம். இந்தியாவில் இம்மாதிரியான கஷ்டம் வாராமலிருப்பதற்காகவே க்ருஹஸ்தர்கள், ப்ரஹ்மசாரி ஸந்யாஸிகளை, ஆதரிக்கும்படியாகவும், பொது ப்ராஹ்மணர்களை மற்றைய ஜாதியார் ஜீவனோபாய ஆவசியகம் தோன்றாமலே வைத்துக்கொண்டிருக்கும் படியாகவும் வேதமே வர்ணாச்ரம தர்மங்களை விதித்துள்ளது. இதனாலே ப்ராஹ்மணர்கள் தமது வைதிக வழியிலேயேதவறாது ஜீவித்து வந்தனர். தற்காலக் கொடுமையில் இவை சற்று பலக்குறைவை அடைய, ப்ராஹ்மணர்களும் ஜீவனோபாயத்தை யோசிக்க வேண்டி வந்துவிட்டது. இதுபற்றி வடக்கே சில வருஷங்களுக்கு முன்னர் கூடிய ப்ராஹ்மண மஹா ஸங்கத்தில் 'ப்ராஹ்மணர்கள் வைதிகத் தொழிலை ஜீவனத்திற்கு உபயோகமே படுத்தாது வேறு லௌகிக உபாயத்தை அதற்காக மாத்திரம் கைக்கொள்ள வேண்டும்' என்ற தீர்மானம் பிறந்தது. இதுவரையில் ப்ராஹ்மணர்களுக்குக் 'கைவினை கரவேல்' என்ற ஸூத்திரத்தின் லௌகிகப் பொருள் பொருந்தாமலிருந்தது, வைதிக ஒழுங்கினாலே. காலக் கொடுமையால் இதையும் ப்ராஹ்மணர்கள் இப்பொழுது கவனிக்கவேண்டி வந்துவிட்டது தமது வைதிக ஒழுங்கு ஸரியாகவும் சுத்தமாகவும் இருக்கவேண்டுமானால். ஆகவே இந்தக் காலத்தில் ப்ராஹ்மணர்கள் உள்பட எல்லா பாதகண்ட வாஸிகளும் தமது வைதிகத்தொழிலுக்கு வெளிப்பட்டதான ஜீவனோபாயம் ஒன்றைக் கைக்கொள்ளவேண்டும் என்றாச்சுது. தத்காலத்திய கைத்தொழில், வியாபாரம், வைத்தியம் முதலிய தேச க்ஷேமத்தை அதிகப்படுத்த ஏற்பட்டுள்ள வாதங்களுக்கு எல்லாம் இந்தப் பொருளில் இந்த ஸூத்திரமே ஆதாரமாகும். ஆனால் முன்கால ஒழுங்குப்படி இந்த ஸூத்திரம் எப்படிப்பட்டவனும் உழுது உண்ணுவதைக் கைவிடலாகாது என்று பொருள்படும். என்ன உத்யோகம் செய்து எவ்வளவு பணம் ஸம்பாதித்தபோதிலும் உழுதுவாழ்வாரிடம்தானே தான்யம் வாங்கி உண்ணத்தொங்கவேண்டும். ஆதலால் அந்த ஜீவனோபாயத் தொழிலை ஒவ்வொருவரும் விடாதிருந்தால் தான் பொதுக்ஷேமம் என்று கூறவந்தது இந்த வாக்யம். பெரியோர் வாய்ச்சொல் சிறப்பு இதுதான். காலத்திற்கு ஏற்ற விரிந்த பொருள்கள் எல்லாவற்றிற்கும் இடம் தரும் தன்மையுடனிருக்கும் அவைகள்.

(2) கர்மானுஷ்டானநிதிகளை விடாதே:—இந்த ஸூத்திரம் முன் பொருளில் ப்ராஹ்மணருக்கு முற்காலத்தில் பொருத்தமில்லாவிடினும், எல்லோருக்கும் எக்காலத்தும் பொதுவாயும், ப்ராஹ்மணர்களுக்குச் சிறப்பாயும் இந்த வைதிகப் பொருளில் மிகுந்த பொருத்தமுடையது. இங்கு கைவினை என்பது ஒருவனுடன் கைகண்ட பொருள்போலவே பொருந்தியுள்ள கர்ம விசித்திரங்கள், அதாவது அவனுக்குஏற்ற ஜாதிவர்ணாச்ரம தர்மங்கள். இந்தப் பொருளைத் திடப்படுத்தி இதனால் ஏற்படக்கூடிய மோக்ஷத்தையும் இடையிலுள்ளவழி நிலைகளையும் காட்ட ஏற்பட்டதுதான் பகவத்கீதா சாஸ்திரம். இந்தக் கைவினை நாற்பெரும் வருணத்திற்கே சிறப்பானது. இப்படி அடங்காத உலகத்தவர்களுக்கு இதைப்பற்றி ஒன்றுமே தெரியாது. பின்னரல்லவா மோக்ஷமார்க்க முயற்சி அவர்களுக்கு உண்டாவது என்பது ஏற்பட, கர்மானுஷ்டானத்தை எப்பொழுதும் விடவேகூடாது. அதுவாக விட்டுப்போகும் நிலைவந்தால் தானே நழுவிவிடும். நமது புத்திபூர்வமாக விவேகம் செய்து அதை நீக்க முயலவே கூடாது. இப்படிச் செய்யவேண்டும் என்ற எண்ணம் உண்டாவதே மனதின் குற்றத்தைக் காட்டும். இதன்படி நடக்க முயலுபவன் குதர்க்கியே, பலபெயர்களை மோசம்

பண்ணிக் கெடுக்கவந்தவனே. இவனுக்கு நரகம்தான் கதி என்று கூறவும் வேண்டுமா? வினை என்ற சொல்லின் கீழ் நாம் செய்பவன், இது செயல் என்ற வேற்றுமை உணர்வுடன் நடைபெறும். உள் வெளித்தொழில்கள் இரண்டையும் அடக்கிவிடலாம். இதனால் கைவினை என்பதனுள் த்யானம், உபாஸனை, நிஷ்டை, நற்குணம், நற்செய்கை எல்லாம் அடங்கும். ஆகவே வைதிக ஒழுங்குப்படி மோக்ஷவழியில் ஏந்த எந்த பாகங்களும் பழக்கங்களும் கூறப்பட்டுள்ளனவோ அவைகளில் நமது பிறப்பு, வர்ணம், ஆச்ரமம், நிலை முதலியவற்றிற்கு எற்றவைகளைக் கடைப்பிடித்து விடாது பழகிக்கொண்டே இருக்கவேண்டும், அவைகள் தாமே நழுவும் வரையில், என்ற சிறந்த பொருளும் இந்த ஸூத்திரத்தில் புதைந்து கிடக்கிறது பாருங்கள்!

இம்மாதிரி அனுஷ்டித்து ஈடேறியவர்கள்தான் நமது ருஷிகள், பெரியோர்கள் முதலிய எல்லோரும். இவர்களுள் மஹாபாரதம் ஆரண்ய பர்வத்தில் வரும் தர்மவியாதோபாக்யானத்தில் வியாதன், பெண்மணி இவர்களும், பீஷ்மரும், ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவுமே தகுந்த திருஷ்டாந்தம்.

# மொழிபெயர்ப்பு விளக்கம்

## TRANSLATION MODELS

Pompeii was a miniature of the civilization of that age. Within the narrow compass of its walls was contained, as it were, a specimen of every gift which luxury offered to power. In its minute but glittering shops, its tiny palaces, its baths, its forum, its theatre, its circus—in the energy yet corruption, in the refinement yet the vice, of its people, you beheld a model of the whole empire. It was a toy, a plaything, a show box, in which the Gods seemed pleased to keep the representation of the great monarchy of earth, and which they afterwards hid from time, to give to the wonder of posterity;—the moral of the maxim, that under the sun there is nothing new.

Crowded in the glassy bay were the vessels of commerce, and the gilded galleys for the pleasures of the rich citizens. The boats of the fishermen glided rapidly to and fro ; and afar off you saw the tall masts of the fleet under the command of Pliny. Upon the shore sat a Sicilian, who with vehement gestures and flexible features, was, narrating to a group of fishermen and peasants a strange tale of ship wrecked mariners and friendly dolphins; just as at this day, in the modern neighbourhood, you may hear upon the Mole of Naples'

பாம்பியை என்னும்பட்டணம் அக்காலத்திய நாகரிகத்திற்கோர் சிற்றுருவாகவே இருந்தது. அதன் மதிட் சுவருள் அடங்கிய சிறுவிடத்துள் பெரும்போக விஷயங்களால் பணக்காரர்கள் அடையக்கூடிய பேறுகள் எல்லாம் ஒருங்குசேர்ந்திருந்தனபோலக் காணப்பட்டன. அதிலிருந்த சிறு பளபளப்பான கடைகளிலும், சிற்றரண்மனைகளிலும், ஸ்நாநத்தொட்டிகளிலும். நியாய ஸ்தலங்களிலும், நாடகசாலைகளிலும், வையாளி வீதிகளிலும், அவ்வூராரிடமிருந்த ஊழல் நிறைந்த சுறுசுறுப்பிலும், பொல்லாங்கு நிறைந்த சீர்மையிலும், அவ்வூரிருந்த தேசம் முழுவதையும் எடுத்துக்காட்டும் விளக்கக் குறிப்பைக் காணலாம். உலகில் முன்னர் இருந்த அரசாட்சி உருவத்தை அமைத்து பின்னர் சிலகாலம் வரையில் காட்டாது மூடி வைத்து, பிற்காலத்தார் வியப்படையும்படி, ஸூர்யனுக்குட்பட்ட இங்கு, புதி தென்பதொன்றுமில்லை என்றபழமொழியின் கருத்தை விளக்க தேவதைகளால் உத்ஸாஹமாக இயற்றப்பட்ட ஒரு பொம்மையோ, விளையாட்டு ஸாமானோ, காட்சிப் பெட்டிதானோ அப்பட்டணம் என்று கூறவேண்டும்.

கண்ணாடி போன்ற அவ்வூர் விரிகுடாவில் கூடிக்கிடந்தன வாணிகக்கப்பல்களும், பொன்பூச்சுக்களும் பாய் தண்டுகளும உடைய பணக்காரர்கள் களியாட்டுப் படகுகளும். மீன் பிடிப்போர் படகுகள் அங்குமிங்கும் நழுவிப்பாய்ந்தோடின. ப்ளினியின் மேல்பார்வைக்குட்பட்ட கப்பற்கூட்டங்களின் உயர்ந்த பாய்மரங்கள் வெகுதூரத்தில் காணப்பட்டன. கரையிலோ, இக்காலத்திலும் நேபல்ஸ் பட்டணத்தில் போதாங்கும் செய்கரையில் கேட்கக்கூடியவை அலைன்ற, கப்பலுடைபட்டுத் தத்தளிக்கும் மாலுமிகள், அவர்கட்குதவும் கடற்பன்றித் தோழர்

(இதன் தொடர்ச்சி 34-ம்பக்கம்.)

# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

### மூன்று பாஷையால் வந்த முடிவு

சாளவதேசத்தின் அரசன்பெயர் முத்கலன். அவனுக்கொரேபிள்ளை. அவன்மஹாநிபுணன். எழுத்தைப் பார்த்தால் அவனுக்குக் கழுதைக் காம்போதி ராக மிதமிஞ்சி வந்துவிடும்; தேம்பித் தேம்பி அழுவான். எழுதுவதென்றால், அவனுக்குப் பெருந்தொல்லை. தன்பிள்ளைக்குப் படிப்பேறாததைக் கண்ட முத்கலன் தன் மகனைப்பார்த்து "உன் களிமண் மண்டையில் என்னால் ஒன்று மேற்ற முடியவில்லை. படியாதவனை, கட்டிக்கொண்ட மனைவிகூட மதியாள். உனக்கு எத்துணை முறை சொல்லி இழவெடுப்பது. என் எதிரில்வராதே. நல்ல உபாத்தியாயருடன் சேர்த்தனுப்புகிறேன். நீ அவருடன் வெளிதேச சஞ்சாரஞ் செய்து படித்துவா. அவரால் முடிந்தவரையும் உனக்குச் சொல்லித் தருவர்" என்று சொன்னான்.

முத்கலன் மகன், தன் உபாத்தியாயருடன் வெளியூரெல்லாஞ் சஞ்சாரஞ்செய்து ஒருவருஷமானதும் தன் ஊரையடைந்தான். வந்த மகனை "என்ன படித்து வந்தாய்?" என்று தகப்பன் கேட்டான். "எவ்வளவோ படித்தறிந்து விட்டேன். யாருமறிய முடியாததெல்லாம் நான் சொல்வேன். நாய்கள் குரைத்தால்கூட அவை என்ன சொல்கின்றன என்று நான் நிச்சயமாகச் சொல்வேன். நாய்ப் பாஷை நான் நன்றாய்க் கற்றுவந்திருக்கிறேன்" என்று மகன் உத்ஸாகத்துடன் பதில் சொன்னான்.

"ஐயோ! இதுவும் ஒரு விதியா?" என்று தன் தலையிலறைந்துகொண்டு அரசன் சிறுவனை வேறொரு உபாத்தியாயருடன் படிக்க வெளியூருக்கனுப்பினான்.

முன்போலவே, அவன் ஒருவருஷம் கடந்ததும், தனது ஊரையடைந்து தந்தையை வணங்கினான். தன் மகனுக்கு வணக்கம் வந்துவிட்டது என்று எண்ணிக்கொண்ட முத்கலன் "என்னடா சேதி? எவ்வளவு படித்தாய்? என்ன ஸமாசாரம்?" என்று மகனைக் கேட்டான். "இம்முறை நான்படித்த பாஷை யுங்களுக்குத் தெரியவே தெரியாது. இப்பொழுதெனக்குப் பக்ஷிகள் பேசும் பாஷை நன்றாகத்தெரியும். அவைகள் பாடும் பாட்டின் நயத்தை நன்றாக அறிந்து சொல்வேன்" என்று மகன் பதில் சொன்னான்.

அரசனுக்குக்கோபம்வந்துவிட்டது. "அடே! பித்துக்கொள்ளிமகனே! மூடசிகாமணியாக விளங்குகிறாய்! உனக்கு அறிவென்பது சூனியமாகிவிட்டது. பணம், பொருள், காலம், எல்லாம் உனக்கு வீணே செலவிட்டேன். வெட்கமில்லாமல் நாய்போலக் குலைக்கக் கற்றேன், பக்ஷிபோல்கத்தக் கற்றேன் என்று வாய்கூசாமல் சொல்லுகிறாய். மடையா! பணம் என்பது உனக்குக் கிள்ளுக்கீரையாய்விட்டது. பணமும் நஷ்டம்; படிப்பும் வந்தபாடில்லை. மடச்சாம்பிராணியாக விளங்குகிறாய். ஐயோ மகனையிற்றே என்று பரிதாபப்படுகிறேன். நீரும் மூன்றுபழிபொறுக்கும் என்பார்கள். முதல் தவறினால் மூன்றில் சரியாய் விடுமென்பார்கள். இம்முறை நீ நன்றாகப் படியாதுவந்தால் என் வாசல் நிழலிற் கூட நிற்கக்கூடாது. நான் அப்பொழுது மகன் என்று கொண்டாட மாட்டேன். பின் என்னை தகப்பன் என்று எண்ண வேண்டாம். நீ வந்த வழியைப் பார்த்துக் கொண்டு எங்கேயாவது போகலாம்" என்று கடுகடுத்து மகனைப்பார்த்தெள்ளுங் கொள்ளும் வெடித்தான்.

"தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்று மகன் மூன்றாவது உபாத்தியாயருடன் வேற்றூர் படிக்கப்போனான். ஒரு வருஷம் கடந்து தனதுதந்தை வீடடைந்து தகப்பனை வணங்கி வாய்பொத்திக் கைகூப்பி நின்றான். அரசனும் "எவ்வளவு படித்தாய்?" என்று கேட்டான்.

"இவ்வருஷம் மண்டூகபாஷை கண்டறிந்து வந்தேன்" என்று மகன் பதில் சொன்னான். அரசனுக்குக் கோபம் வந்துவிட்டது. தனது ஸேவகர்களைக்கூப்பிட்டு, "இனி இவன் என் மகனில்லை, அவனைத் துறந்து விட்டேன். இவனைக் குண்டுகட்டுக் கட்டி காட்டில் கொண்டு போய் கத்திக்கிரையாக்கி விடுவீராக" என்று கண்ணில் தீப்பொரிபறக்கக்கட்டளையிட்டான்,

---

கள். இவர்களைப்பற்றிய விநோதக்கதைகளை சுறுசுறுப்பான அங்க அடையாளங்களுடனும், படிவான முகக்குறிகளுடனும் எடுத்துசரமாரியாகப் பொழிந்துகொண்டிருந்தான் ஒருஸிஸியாயான், செம்படவர்கள், குடியானவர்கள் ஆகிய இவர்கள் நிறைந்த ஒரு கூட்டத்திற்கு.

ஸேவகர்களும் அரசன் கட்டளைக்குட்பட்டவர்களாய்ச் சிறுவனைக் காட்டிற்குக்கொண்டு போனார்கள். ஆனால் அவனை வெட்டுவதற்கு அவர்மனம் ஒப்பவில்லை. ஆகையால் அவனை அங்கேயே விட்டுவிட்டு, ஒருமானைக்கொன்று அதன் நாக்கையுங் கண்ணையுங்கொண்டுவந்து அரசனுக்குக் காட்டினார்கள்.

சிறுவனும் நெடுந்தூரம் நடந்து ஒரு கோட்டையை யடைந்தான். அங்கவனுக்குத் தூக்கமேலிட்டதால் அக்கோட்டைத் தலைவனைத்தனக்கொரு விடுதி படுக்கக் கொடுக்கும்படி கேட்டான். அவனும் "கோட்டையரண்மனையின்மேல் கோபுரத்தில் இடமிருக்கிறது. உனக்கு வேண்டுமென்றால் அங்கு தூங்கலாம். ஆனால் அதில் காட்டுநாய்கள் அதிகமாக இருப்பதல்லாமல், வந்த ஆளைக் கொன்று இரைசெய்கின்றன வாகையால் அங்கு தூங்குவது ஆபத்திற்கிடமாகும்; இந்நாய்களுடைய ஸம்பர்க்கத்தால் இந்நாடு முழுவதிற்கும் நடுக்கம்" என்று சிறுவனை எச்சரித்துப் பதில் சொன்னான்.

ஆனால் சிறுவன் அம்மொழிகளுக்குப் பயப்படாமல் "அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம், நாய்கள் எனக்கொன்றும் கெடுதிசெய்யமுடியாது. அவற்றிற்கு ஆஹாரத்திற்காக ஏதேனும் கொடும்; நான் போய் படுத்துக் கொள்கிறேன்; தயவுசெய்யும்" என்று கேட்டான். இதைக்கேட்க, ஜனங்களுக்குச் சற்று ஸமாதானமாக, கோட்டைத்தலைவன் சிறுவனிடம் ஆஹாரமூட்டையைக் கொடுத்துக் கோபுரத்தருகில் அழைத்துப்போய் அதன் வாயிலைத் திறந்தான். சிறுவனும் உள்ளே நுழைந்தான். ஜனங்கள் தமதிடம் போனார்கள்.

உள் நுழைந்ததும் நாய்கள் குலைக்கவில்லை. தமது நேசனைக்கண்டாற்போல தமது வாலையாட்டிக்கொண்டவனைச் சூழ்ந்துகொண்டன.

நிற்க, காலையானதும் கோட்டைத்தலைவன் கோபுரக்கதவைத் திறந்தான். சிறுவனும் சிறிதும் வாட்டமடையாமல் வெளிவரக்கண்டவன் ஆச்சரியமடைந்தான். கோட்டைக்காரன் "இரவு உன்னை அந்நாய்கள் தொந்தரை செய்யவில்லையா?" வெனக்கேட்டான். "தொந்தரையா? யார் சொல்லுவார். அவை தமது கஷ்டநிலையை என்னுடன்சொல்லியழுதன. அவற்றைமந்திரத்தால் கட்டிப் பணத்தைக்காக்கும்படி ஏவியிருப்பதால் ஆகார நித்திரையில்லாமல் அழுவதாக என்னிடத்து சொல்லின. இதற்காகத்தான் இவ்வூராரை அவை தொந்தரை செய்கின்றன. அதை நீக்குவதற்கு வழிகூட எனக்கவை கற்பித்திருக்கின்றன" என்று சிறுவன் பதில் சொன்னான்.

இந்த ஸமாசாரத்தைக் கேட்டதும், அக்கோட்டைத்தலைவனுக்குண்டான ஸந்தோஷத்திற்களவேயில்லை "ஏன் அப்பா! நீ இந்த பெரும் பணக்குப்பையை வெளி எடுத்து விடுவாயானால் உன்னை என் மகனாகக் கொண்டாடுவேன்" என்று சிறுவனைக்கொண்டாடினான். சிறுவனும் அக்கோபுரத்தின் மேலேறி உள் சிறுவழி மூலமாகச்சென்று உள்ளே சேமித்திருந்த பணக் குவியல்களை எல்லாம் வெளியிலெடுத்து எறிந்தான்.

அன்று முதல், நாய்களுடைய குலைத்தலால் முன்னிருந்த பெருங்கூச்சல் எங்குங் கேட்கவேயில்லை. அத்தொல்லையிலிருந்து சிறுவனால் அவ்வூர் விடுபட்டு க்ஷேமமடைந்தது.

பின் சிறுவன் தன் வழியே நடந்து வந்து கொண்டிருந்தான். தக்ஷிணத்தில் உள்ள கிராமத்தருகு அப்பொழுது வந்துகொண்டிருந்தான். பக்கத்திலிருந்த குட்டைகளில் இருந்த தவளைகள் ஓயாமல் கத்திக்கொண்டிருந்தன. அவை என்ன சொல்கின்றன என்று சிறுவன் காது கொடுத்துக் கேட்டான். அதைக் கேட்டதும் அவனுக்குத் தனக்குந் தெரியாமல் பெருங்கவலை மேலிட்டது.

அதே ஸமயத்தில் அக்கிராமத்திய மடத்தின் அதிபதி ஸித்திபடைந்தார். அவர்க்குப்பின், யார் குருபீடத்தை யடைவதென்று அங்கு மடாதிபதிக ளெல்லாங்கூடிப் பெருந்தர்க்கம் நடத்திக் கொண்டிருந்தார்கள். கடைசியாக அக்கூட்டத்தார் "எந்த மனுஷனிடம் தெய்விகத் தன்மை விளங்குமோ அவனையே குருபீடத்துக்கு உரியவனாகக் கொள்வது" என்று நிச்சயித்தார்கள்.

இவ்வாறு நிச்சயித்துக்கொண்டிருந்த ஸமயம் நமது அரசச்சிறுவன் ஸபைமுன் தோன்றினான். அவனை உபய கருடன் வலம்வந்து சூழ்ந்து பிரதக்ஷிணஞ் செய்யக்கண்ட கூட்டத்தார், சிறுவனையே அம்மடத்தின் அதிபதியாக்க நிச்சயித்து அவனை அப்பதவியை ஒப்புக்கொள்ளும்படி வேண்டினர்.

இந்தப் பதவி இவனுக்கு வருமென்றுதான் முன் தவளைகள் சொல்லியது. அதைக் கேட்டுதான் சிறுவன் கவலை கொண்டான். இப்பொழுது அவர் கேட்பதைக் கேட்டு, அத்தகைய பதவிக்குத் தான் தகுந்தவனல்ல வென்று எண்ணி அப்பதவியை ஒப்புக்கொள்வதற்குத் தயங்கினன். ஆனல் அக்கருடன்கள் தமது பாஷையால் ஒப்புக்கொள்ளும்படி அவனைத் தூண்டின. அவனும் அவ்வாறே ஒப்புக்கொண்டான். பின் ஸகலவைபோகத்துடனும், அவனுக்கு அம்மடாதிபதிப் பட்டம் அளிக்கப்பட்டது. பின் எல்லார் முன்னும் பூஜைகள் செய்து எவ்வாறு தீர்த்தப் பிரஸாதமளிப்பதென்றவன் யோசித்துக் கொண்டிருக்கும்போது அங்கிருந்தஉபயகருடன்களும்தமது பாஷையில் மந்திரங்களைக் கூறி நடத்தவேண்டியதந்திரங்களையுங் காட்டிக் கொடுத்தன. சிறுவனும் மடாதிபதிப் பட்டத்துடன் மிகு வைபவத்துடன் விளங்கினன்.

பின் சிறுவன் தனது தகப்பனது நாட்டில் விஜயஞ்செய்யத் தனக்கு நடந்த மரியாதைகளைப் பெற்றுத் தன் தந்தையிடம் தனக்கு வந்த பதவியைப்பற்றி மறைவாய்ச் சொன்னன்.

மன்னனும் உள்ளங்களித்து ஸந்தோஷமடைந்தான்.

சிறுவனும் அக்குருபீடத்தில் நெடுநாளிருந்தான்.

"மரம் பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவரு மீங்கில்லை—"

---

**இந்திய தானியங்கள்.**— வட அமெரிக்கா தேசத்தில் யூனைடெட் ஸ்டேட்ஸ் கவர்ன்மெண்டார் அங்கு ஜனங்கள் சாப்பிடும் ஆகாரத்தையும் இந்தியாவில் ஜனங்கள் உபயோகிக்கும் முக்கியமான ஆகாரதானியங்களையும் (கோதுமை, அரிசி, சோளம், சாமை முதலியவைகள்) டாக்டர் C. F. லாங்கு வொர்தி என்பவரைக் கொண்டு சோதித்துப் பார்த்தார்கள். இந்தய தானியங்கள் புஷ்டியையும் தேகத்துக்கு வலிவையும் கொடுக்கின்றன வென்றும், தானியங்களில் ஒன்றுக்கொன்று சொற்ப பேதமே இருக்கிறதென்றும் ஆகையினல் இவைகள் ஜனங்களுக்குத் தகுந்த ஆகாரமென்றும் சிலாக்கியமானவை யென்றும் இந்த டாக்டர் சொல்வதை யனுஸரித்து அந்த கவர்ன்மெண்டார் ஒரு அறிக்கையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

***

**உலகத்தில் நடைபெறும் பத்திரிகைகள்** —தினசரிப் பத்திரிகைகளும் வாரப் பத்திரிகைகளுமாக உலகத்தில் 66,000 பத்திரிகைகள் வெளியாகின்றனவாம்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

### ஸுகன்யை அல்லது பதிபக்தி

### Sukanya or The True Wife

முற்காலத்தில் சர்யாதி மஹாராஜனுக்கு எல்லா லட்சண குணமும் வாய்ந்த பத்தினிகள் நாலாயிரம் பேரிருந்தார்கள். இவர்களுக்கு, ஒரே குமாரத்தி பிறந்து ஸுகன்யை என்ற நந்நாமம் பூண்டு வளர்ந்து வந்தாள். ராஜனுக்கும், அவன் பத்தினிகளுக்கும் ஸுகன்யை யிடத்தில் பரமப்பிரீதி. அவர்களிருந்த பட்டணத்துக்குக் கொஞ்சதூரத்துக் கட்பால் சலவைக்கல்லால் படிகள் கட்டப்பட்டு பால் போல் நீர் நிரம்பின ஏரி யொன்றிருந்தது. அன்னம், சக்கிரவாகம், நீர்க்கோழி முதலிய விசித்திரப் பறவைகள் திரள்திரளாயங்கு சஞ்சரித்துக்கொண்டும், தாமரைகளில் வண்டுகள் புகுந்து தேனையுண்டு மதங்கொண்டு ரீங்கார சத்தத்தோடு பாடிக்கொண்டு மிருப்பது வழக்கம். அவ்வேரியின் மேலைப் பாகத்தில் வெகுதூரம்வரை அநேக விருக்ஷங்கள் வளர்ந்து ஒரே காடாயிருந்தது. எங்கே பார்த்தாலும் புன்னை, கொன்னை, மாதுளை, எலுமிச்சை, முந்திரி, புளி, ஆல், அரசு, அகில், வேம்பு, பாக்கு, தென்னை, கருங்காலி முதலான மரங்களடர்ந்திருந்தன. அக்கானகத்தின் நடுவில், பிருகு மஹருஷிக்குத் தனயனை ச்யவனர், அங்கு மனுஷ்ய ஸஞ்சாரமிராதெனக் கருதி, இல்லந்துறந்து, ஸ்வாஸபந்தம் செய்து, ஸர்வேந்திரியங்களையும் அடக்கி ஜலபானகாரமின்றி, த்ருடாஸனத்திலமர்ந்து, மௌனம் ஸாதித்து, அம்பிகையைக்குறித்து உக்கிரமான தவஞ்செய்துகொண்டிருந்தார். அவர் வெகு காலமாய் தியானத்திலாழ்ந்து இருந்தவிடத்தில் பெரிய புற்றொன்றெழும்பி அவரை மூடிக்கொண்டது. அருகில் கொடிகள் கிளம்பிப் படர்ந்தன. எறும்புகள் வரிசை வரிசையாய் புற்றுக்கும் புற்றிலிருந்தும் போய்வந்து கொண்டிருந்தன.

இவ்வாறிருக்க, ஒருநாள் சர்யாதி மஹாராஜன் தன் ஸ்திரீ ஜனங்களை யிட்டுக்கொண்டு ஜலக்கிரீடை செய்ய மானஸ ஸரஸுபோன்ற ஏரிக்கு வந்துசேர்ந்தான். அவன் நீரில் இறங்கி க்ரீடை செய்ய, ஸுகன்யை தன் தோழிமார்

களோடு கானகம் பிரவேசித்தாள். சிறிது நேரம் உல்லாஸமாய் விளையாடிக்கொண்டிருந்தவள், மலர்கள் கொய்திடும் எண்ணமாகவே வனத்திலலைந்து திரிந்து கடைசியில் ச்யவனரது புற்றையடைந்தாள். ராஜபுதல்வி, விளையாட்டுப் பெண்ணானதால் புற்றினருகிலுட்கார்ந்து அதன் துவாரத்தின் வழியே பார்த்தாள். மின்மினிப்பூச்சிபோல் ஒளியொன்று அதற்குள் தென்பட்டது. அஃதென்னவென்று தீர்மானிக்க விருப்பங்கொண்டு ஒரு கூர்மையான முள்ளெடுத்து த்வாரத்தில் குத்தப்போனாள். அதுகண்ட ச்யவனர், புற்றுக்குள்ளிருந்து "இதென்ன பெண்ணே, நான் தபஸ்வீ, புற்றை யிடிக்காதே, அப்புறம்போ" வென மந்தமான குரலோடு கட்டளையிட்டார். ஸுகன்யை ஏதோ சத்தம் கேட்கிறதென்று அலட்சியமாய், விளையாட்டுப் புத்தியோடு மறுபடி முள்ளையெடுத்து 'இவையென்ன' வென்று ருஷியின் கண்களில் குத்திவிட்டுப் போய்விட்டாள். ச்யவனர் வலிபொறுக்க மாட்டாமல், மிக்க வருத்தமடைந்து கோபிக்க. நீராடிக்கரையேறியிருந்த அரசன், அவன்பரிவாரங்கள் யாவருக்கும் மலமூத்ராதிகள் வெளிவாராமல் போய்விட்டது! ஸைன்யங்கள் முறையிட்டன. சர்யாதி, துக்கக்கடலிலாழ்ந்து. அரண்மனையேகி, இதற்குக் காரணம் யாதென்று வினவி "ஏரிக்கு மேற்கு திக்கிலுள்ள வனத்தின் மத்தியில் ச்யவனமஹருஷி அருந்தவம் புரிந்துகொண்டிருக்கிறார். அவருக்கு எவரோ தீங்கிழைத்திருக்க வேண்டும். அதனால்தான் இத்துக்கம் நேர்ந்திருக்கின்றது. அதில் ஸந்தேகமில்லை. எத்துஷ்டன் விளைத்தது அவர் தவத்துக்கு கேடு? சொல்லட்டும்" என்று கடிந்தான். தாங்கமுடியா வேதனையால் பீடிக்கப்பட்ட பரிவாரங்கள் முழுதும், "ஸ்வாமி, 'மனோவாக்காய' மென்ற மூன்றுவிதத்தாலும் தபஸ்வீக்கு நாங்கள் கெடுதி செய்ததாகவறியோ" மென்று உத்தரம் மொழிந்தார்கள்.

இவ்வாறிறைவன் துக்கித்துக் கலக்கமுற்று தன் ஸ்நேகித வர்க்கங்களை யன்போடும் ஆத்திரத்தோடும் வினவினான். ஜனங்கள் முகத்தில் ஈயாடவில்லை. இதுகண்ட ஸுகன்யை தான் செய்த காரியத்தை நினைத்துத் தகப்பனைப்பார்த்து "அப்பா, வனத்தில் நான் என் மனதுக்கிசைந்தபடி விளையாடுகையில் இரண்டு த்வாரங்களுடன் கூடின புற்றொன்று கண்ணில் தென்பட்டது. மின்மினிப் பூச்சிபோல் அங்கு ஒளியொன்று வீச, அஃதென்னவென்று பார்க்க, முள்ளெடுத்து அப்புற்றில் குத்தினேன். முள்ளையெடுத்ததும் அதன் நுனியில் ஈரமிருந்தது. புற்றிலிருந்து 'ஐயோ' வென்றொரு மந்தமான சத்தமுண்டாயினது. அதென்னவென்று புரியாதவளாய் திகைத்து வந்துவிட்டேன்" என்று சொன்னாள். சர்யாதி கேட்டு ச்யவனருஷிக்குக்கெடுதிஸம்பவித்து விட்டதெனக் கொண்டு, பரபரப்புடன் அவரிருக்குமிடமேகி, புற்றையிடித்துவிட்டு, கடுந்துயரனுபவித்துக் கொண்டிருந்த ச்யவனரைக்கண்டு சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து கைகூப்பி வினயத்துடன் "முனிச்ரேஷ்டரே! என் புத்திரி, குழந்தை விளையாட்டில் கவனமாயிருந்து தங்களுக்கித் தீங்கு செய்துவிட்டாள். ருஷிகள் பொறுமையுள்ளவர்களென்றுநான் கேள்வியுற்றிருக்கிறேன். ஆதலால் அஞ்ஞானத்தால் செய்ததை மன்னித்தருளவேண்டு" மெனப் பிரார்த்தித்தான். வணக்கத்துடன் வேண்டும் அரசனை நோக்கி ச்யவனர் "நான் ஒரு ஸமயத்திலும் கொஞ்சமேனும் கோபியேன். உன் புதல்வி எனக்குத் தீங்கிழைத்தபோதும் நானவளைச் சபிக்கவில்லை. குற்றமற்ற வெனது கண்ணில் வலியுண்டாகி யிருப்பதால், உனக்கும் கெடுதல் நேர்ந்திருக்கலாமெனத் தோன்றுகிறது. ஈச்வரி பக்தனுக்கு இடையூறு செய்வது சிவனுக்கே யனர்த்தமென்றால் மற்றவர்களைப்பற்றிக் கேட்பானேன்! நான் இவ்விஷயத்தில் என்ன செய்யக்கூடும்? நானே அந்தகனாகிவிட்டேன். எனக்கு யார் உதவிபுரிவார்கள்?" என்று வருந்த, அரசன் "எனது வேலையாட்களில் அநேகரைத் தங்களுக்கு ஊழியஞ்செய்யச் சொல்லுகிறேன். நீங்கள் கிருபை செய்யவேண்டும்." என்று தலைவணங்கி யிரங்கினான். அதற்கு முனிவர் "அந்தகனாயிருந்துகொண்டு, நானெவ்வித முதவியின்றி தவஞ்செய்வது? உனது ஸேவகர்கள்தாம் எனக்கு என்ன சுச்ரூஷை செய்வார்கள்? தாமரைக் கண்ணுடைய உனது பெண்ணை எனக்கு விவாகம் செய்துகொடுத்தால் நான் தவஞ்செய்ய அவள் எனக்குப் பரிசரியை செய்யட்டும். அவ்வாறு நீ கொடுத்தெனக்குத் திருப்தி வந்ததும் உனக்கும் உன் ஸைன்னியத்துக்கும்

இப்பொழுதிருக்கும் வருத்தம் நீங்கிவிடும். நான் தபஸ்வீ. அவளையெனக்குக் கொடுப்பதில் ஒரு தீமையுமில்லை. என்ன சொல்லுகிறாய்?" என்று வினவினர். சர்யாதி இவ்வார்த்தையைக் கேட்டு 'கொடுக்கிறேன், கொடுக்கவில்லை' யென்று சொல்லாமல் சிந்தைக்கடலிலாழ்ந்தான். தனக்குள் மாத்திரம், "என்ன, கேவலம் அந்தகர், கிழவர், விகாரலட்சணத்தோடு கூடினவர். இவருக்கு என் தேவகன்னிகை போன்ற ஸுகன்யையைக் கொடுத்துவிட்டு எவ்வாறு பிழைத்திருப்பேன்? தன் ஸுகத்தை நாடி தன் குமாரியின் ஸம்ஸாரஸுகத்தைப் பறிகொடுக்குமற்ப புத்தியுள்ளவன் யார்? அந்தோ யௌவனத்தில் காமன் ஸ்திரீகளைப்பீடிப்பனே! தனக்கேற்ப பதியடைந்தும் அழகுவாய்ந்த பெண்களுக்கு மிகுதியல்லவோ இப்பீடை! அப்படியிருக்க கண்ணிழந்த தபஸ்வீக்கிழவரிடம் என்செய்வாள்? முன்காலத்தில் தருணிப்பருவத்திலிருந்த 'அஹல்யை' கௌதமரைப் பதியாக வடைந்து தேவேந்திரனால் மோசம் போனாளன்றோ? அவள் நீதிநெறி தவறினதை கௌதமரறிந்து அவளைச் சபிக்கவில்லையா? ஆதலால் வருவன வரட்டும். என் கண்ணுக்குங் கண்ணான குழந்தையைக் கொடுப்பேனோ?" வென்று உழன்றுகொண்டே அரண்மனை யடைந்து, மந்திரிகளை யழைத்து "மந்திரிகாள், இச்சங்கடத்தில் நான் என்ன செய்வது? ஸுகன்யையைக் கொடுக்கவா? அல்லது நாமெல்லோரு மித்திராத்துக்கமனுபவிப்பதா? நீங்கள் ஒன்றுகூடி தீர்க்காலோசனை செய்து சொல்லவேண்டும்" என்று வேண்டினன். மந்திரிகளும் "நாங்கள் என் சொல்வது? ஸுகன்யையை முனிவருக்குக் கொடுக்க கொஞ்சமேனு மெங்களுக்கு மனமில்லையே!" என்றுமொழிந்தார்கள்.

இவ்வாறு அவர்கள் மனங்கலங்கிக் குலைந்து நிற்பதைக் கண்ட ஸுகன்யை புன்சிரிப்புடன் "அப்பா, ஏன் என் விஷயத்தில் இவ்வளவு பீடிக்கப்பட்டுத் துயரடைகிறீர்கள். ச்யவனரின் தவத்துக்குப் பங்கம் விளைத்தது நான். நான் போய் என்னையே அர்ப்பணம் செய்து அவரை ஸமாதானப்படுத்தி ஸந்தோஷப்படுத்துகிறேன்" எனப் புகன்றாள். இது கேட்டரசன் கொஞ்சம் வருத்தம் நீங்கி மந்திரிகளருகிலிருக்கும்பொழுதே "குழந்தாய், எவ்விதம் மெலிந்த சரீரத்தோடு நீ வனம் சென்று, வயது முதிர்ந்துக் கோபம் எஞ்சி மிஞ்சியிருக்கிற ச்யவனருக்கு அடியாளாய்ப் பணிவது? சரியான வயது, ஞானம், வலிமை, செல்வம் இவை படைத்தவனுக்கல்லவோ தகப்பன் தன் மகளை மணஞ்செய்து கொடுக்கவேண்டும். தனமில்லாதவன் பொருட்டு ஒருகாலும் கொடுக்கக்கூடாதே. கண்ணே! உன் ஸௌந்தர்யமெங்கே! வனத்திலலைகிற தபஸ்வீ எங்கே! இவ்வரண்மனை எங்கே! கானகத்தில் தனித்திருக்கும் குடிசையெங்கே! அன்னம்போற் பேசுமென்னருமைப் புதல்வியே! வரவேண்டியவை வரத்தானே வேணும். என் ராஜ்யமிழப்பது நலமே. எனக்கும் என் ஸைன்னியத்துக்கும் மரணம் நேருவதும் நலம்! ஒருபொழுதும் கண்ணிழந்து விகாரமாயிருக்கும் ச்யவனரிட முன்னையனுப்பேன்" என்று றுதியாய்க் கூறினன். கேட்டு ஸுகன்யை "என்னைக் குறித்துக் கலங்குவதி லுபயோகமில்லை. என்னால் எல்லா ஜனங்களுக்கும் க்ஷேமமுண்டாகட்டும். நான் ச்யவனரைப் பதியாக வடைந்து அதிக பக்தியோடும் அன்போடும்அவர்மனதுக்கிசைந்தவாறு தருமங்கெடாது பணிந்து நடக்கிறேன். எனக்குப் போகத்திலாசையில்லை. நீங்கள் வருத்தப்படவேண்டா" மென்று மன்றாடினாள். இதைக்கேட்டதும் மந்திரிகள் ஆச்சர்யமடைந்தார்கள். அரசனுங் கடைசியாகஅவள் வார்த்தைக்கிணங்கி வனமடைந்து ச்யவனரை வலம் வந்து நமஸ்கரித்து "ஆர்ய, என்புத்திரியை விதிப்பிரகாரம் தங்களுக் கடியாளாக்கிக் கொள்ளுங்கள்" எனச்சொல்லி விவாஹவிதிப்படி பெண்ணை தானம் செய்தான். அரசன் கொடுத்தசீர்முதலானவைகளை வேண்டாமென முனிவர் மறுத்துவிட்டார். அவளைப்பெற்று ருஷி களிப்புற, அரசனுக்கும் ஸைன்னியத்துக்குமிருந்தவேதனைநீங்கி ஸுகமடைந்தார்கள். திரும்பிப்போகும் தருணத்தில் தகப்பனை நோக்கி ஸுகன்யை "என்னுடையாபரணங்களையெடுத்துக்கொண்டு மரவுரியும்மான்தோலும் கொடுங்கள். ருஷிபத்தினிகள்போல வேஷம் பூண்டு தங்களுக்கு இவ்வுலகத்திலும் வேறுலகத்திலும் கொஞ்சமும் அபகீர்த்திவாராமல் என்பதியை ஸேவித்து வருகிறேன். பெண்ணை இவ்விதம்கொடுத்துவந்துவிட்டோமேயென்று நீங்கள் சிறிதும் மனக்கவலைகொள்ளக்கூடாது.

வஸிஷ்டருக்கு அருந்ததி எவ்வாறே, அத்ரி மஹருஷிக்கு அனுஸூயை எவ்வாறே, அவ்வாறே நான் ச்யவனருக்கு தர்மபத்தினியாக விருந்து தங்கள் கீர்த்தி குறையாமல் நடந்துவருகிறே"னென்று ஸமாதானப்படுத்தினள். அரசன் செவியில் இப்பேரின்பமொழிவிழ, அவள் கேட்டதைத்தந்து ருஷிபத்தினிக்குரியவாடையணிந்து வந்த மகளைப்பார்த்து பிரிந்து போக சற்றும் மனம் வராதவனுய்க் கண்ணீர்விட்டுப் பிரமித்தபடியே நின்றான். அங்கிருந்தவர்கள் யாவருமிக்காட்சியைக் கண்டு துக்கம் மேலிட்டவர்களாய்க் கதறினர்கள். சற்றுப்பொறுத்து ருஷிதம்பதிகளிடத்தில் விடைபெற்று, சர்யாதி, மந்திரி வர்க்கங்களோடு நகரத்துக்குத் திரும்பினன்.

அரசன் போனதுமுதல், ஸுகன்யை பதிபக்தியே மேலாய்க்கொண்டு, 'தக்ஷிண, கார்ஹபத்திய, ஆகவனீய' மென்ற மூன்றுவித அக்னிகள் வளர்த்தாள். வனத்திலுள்ள இனிய கனி கிழங்குகொணர்ந்து ச்யவனருக்குக்கொடுத்து ஒருவேளை புசியுமென்பாள். அவரை வெந்நீரில் ஸ்நாநம்செய்வித்து, மான்தோலுடுத்தி மங்களாஸனத்திலமர்த்தி, எதிரில் எள், தர்ப்பமிவை பாத்திக் கமண்டலுவை வைத்து "ஸ்வாமி, நித்யகர்மங்கள்செய்யு" மென்பாள். பிறகு கைப்பிடித்துத்தூக்கி வேறொரு ஆஸனத்தி லுட்காரவைத்து உருசியுள்ள பழங்கள் தந்து பக்குவமாய் நீவாரான்னம் சமைத்துப் பரிமாறுவாள். உண்டுகளித்ததும்அவரை ஆசமனீயம்செய்பச் சொல்லிஅன்புடன் தாம்பூலங் கொடுப்பாள். கைகால்பிடித்துச் சரீரஸெளக்கிய முண்டுபண்ணுவாள். தானும் சாப்பிட்டு அவர் ஸன்னதியடைந்து "என்ன உத்தரவு செய்கிறீர்க" ளென்று கேட்பாள். இவ்விதமே சந்திக்கடன்கள் முடிந்ததும் பூக்கள் சேகரித்து மிருதுவான படுக்கை தயாரித்து அதில் படுக்கச்செய்வாள். அனுமதி பெற்று அருகிலுட்கார்ந்து பாதங்களைத்தடவிக்கொண்டே "நாதா, குலஸ்திரீ தர்மம் என்ன? அவள் எவ்விதம் நடந்துகொள்ள வேணுமென்று எனக்குச் சொல்லுங்க"ளென்பாள். சிறிது நேரங்கழித்து விசிறியெடுத்து இளங்காற்றுப்பட வீசுவாள். குளிர்காலத்தில் காட்டுக்குச்சிகள் கொணர்ந்து பதியின் முன் தீமூட்டம் போட்டு அடிக்கடி "குளிர்நீங்கியதோ? ஸௌக்கிய முண்டானதோ?" வென்பாள். அவர் உறங்கினதும் காலடியில் படுத்துத் தானும் நித்திரை போவாள். விடியற் காலத்திலெழுந்து ஜலபாத்திரம் மண் இவை எடுத்துவைத்து தூரமழைத்துப் போய்விட்டு மறுபடியுமழைத்து வந்து பாதப் பிரட்சாளனம் செய்வாள். பிறகு பல்துலக்கச் சொல்லி ஸ்நானம் செய்வித்து, "மணாளரே, ஆதித்தன் உதிக்கின்றான். ஹோமகாலம் நெருங்கி விட்டது. நித்யகர்மவிதிகள் நடத்து" மென்பாள். இவ்வாறு இம்மாசற்ற பெண்மணி, நாடோறும் பதிபக்தியே ஞாபகமாய் ச்யவனரை யுபசரித்து வந்தனள்.

இப்படியிருக்கவொருநாள் அச்வினிகுமாரர்களிருவரும் ஒருவரோடொருவர் விளையாடிக்கொண்டு ச்யவனரது ஆச்ரமத்தை யணுகினர்கள். அப்பொழுது ஏரியில் மூழ்கி மல்லிகைக்கொடிபோல்விளங்கி ஆச்ரமத்தை நோக்கிவந்துகொண்டிருந்தாள் ஸுகன்யை. தேவர்கள் அவளை நெருங்கி மோகித்தவர்களாக "மாதே, ஒரு க்ஷணிகநேரம் நிற்பயோ? அன்ன நடைபோட்டுப் புன்னகையுடன் கூடிவரும் நீயார்? உன்பிதாயார்? கணவன்யார்? நீயாருடைய பாக்கியம்? இப்பரந்துள்ள தடாகத்தில் ஸ்நானம் செய்யத்துணையில்லாமல்வந்தது என்கொலோ? உன்காந்தியைப் பார்த்தால் நீ மஹாலக்ஷ்மி போல் விளங்குகின்றாயே! உன் லட்சணம் பொருந்திய பாதங்கள் கீழே சலிக்கின்றதைக் காண, பெண்ணே, எங்கள் மனம் நோகின்றதே! விமானத்திலேறிச் செல்லவேண்டியநீ பூமியில் நடப்பது தகுமோ? நூறு தோழிமார் இடையே வரவேண்டிய நீ நிர்மானுஷ்யமான இக்கானகத்தில் தன்னந்தனியே வந்தது யாது காரணம்பற்றியோ? உனது பெற்றோர்களல்லவோ பாக்கியம்பெற்றோர்கள்! உன்பர்த்தாவின் ஆநந்தமல்லவோ ஆநந்தம்! நீ ராஜகுமாரத்தியோ, அல்லது தெய்வகன்னிகைதானே! உன் திருவடிகள் இதில் ஸஞ்சரிக்க இப்பூவுலகம் புண்ணியம்செய்ததோ? பறவைகள் மிருகங்களெல்லாம் உன்னைக்காணமல் தவித்தனவோ? தவந்தான் செய்தனவோ? உன்குயில் போன்ற குரலைக்கேட்க எங்கள் செவிகள் ஆசையுற்று நிற்கின்றன. தங்கக்கொடிபோலுலாவுகிறவளே, நீ யார்? உன் பிதா யார்? உன்பதியார்? நாங்கள் தேவர்கள். சொல்லிப்போ" வென்று தடுத்தார்கள். (அடுத்த ஸஞ்சிகையில் முடிவுபெறும்.)

# விசேஷக் குறிப்புகள்

## NEWS AND NOTES

**தொழில் ஸ்கூல்கள்.**—சென்னை ராஜதானியில் 39 தொழிற்படிப்பு ஸ்கூல்கள் இருக்கின்றன. அவைகளின் மேற்பார்வையை, தொழில்களின் டைரெக்டரே பார்த்து வரவேணுமாயும் எப்பிரல் மாதம் 15-ந் தேதி முதல் அவருடைய வசத்திலேயே ஒப்புவிக்கும்படியாயும் சென்னைக் கவர்ன்மெண்டார் உத்தரவு செய்திருக்கிறார்கள்.

***

**நகரங்களின் அபிவிர்த்தி.**—இக்காலத்தில் பட்டணங்களில் மிக விரைவாக விருத்தி யடைந்துவருகின்றன வென்று தெரிகிறது. சென்ற வருஷத்தில் அமெரிக்காவிலுள்ள நியூயார்க்பட்டணத்தில் 12,000 புதிய வீடுகள் கட்டப்பட்டன. அவைகளுக்காக ஏற்பட்ட செலவு 414,00,000 பவுண்டு என்று தெரிகின்றது.

***

**இராவிற் கண் விழித்தல்.**—இரண்டு இரவுகளில் ஒரு மனிதனுக்குத் தூக்கமில்லாமல் போனால் அந்த சிரமமும் ஒய்ச்சலும் பரிகாரமாவதற்கு 15-நாள் ஆகிறதென்று சாஸ்திர நிபுணர்களினால் அறியப்பட்டிருக்கிறது. இது இப்படியிருக்க, நம் தேசத்தில் அநேக ஜனங்கள் டிராமாக்களில் இடைவிடாமல் பல நாள் சென்று இரவில் கண்விழித்துக்கொண்டு ரூபாயையும் செலவழிக்கிறார்கள். இவர்களுக்குத் தேக ஆரோக்கியம் கெடுமென்பதில் ஏதேனும் ஸந்தேகமுண்டோ?

***

**ப்ரிட்டிஷ் ராஜ்யத்தின் ஜனத் தொகை.**—முன் பம்பாய் கவர்னராயிருந்த லார்டு ஸைடென்ஹாம் "ராயல் கலோனியல் இன்ஸ்டிட்யூட்" என்ற சபை முன் ப்ரிட்டிஷ் ராஜ்யத்தின் ஜனத்தொகையைப் பற்றி ஒரு வியாஸம் படித்தார். உலகத்தின் மொத்த ஜனத்தொகை 180-கோடி. பத்து வருஷத்துக்கொரு தடவை அந்த ஜனத்தொகையானது நூற்றுக்கு 5 அல்லது 6 வீதம் அதிகமாய்க்கொண்டு வருகிறது. உலகத்தின் மொத்த ஜனத்தொகையில் நாலில் ஒரு பங்கு ப்ரிட்டிஷ் ராஜ்யத்தில் அடங்கியிருக்கிறது. ஜனங்களின்தொகை அதிகமாவதற்கு இந்தியாதான் முக்கிய காரணம். ஆகையால் இந்தியா ஜன நெருக்க முள்ளதென்ற விஷயம் கணக்குகளைச் சோதித்துப் பார்ப்பவர்களுக்கு நன்கு விளங்கு மென்றும், அதற்கு மாறாக ஸர்வில்லியம் ஹண்டர் என்றவர் சொல்லியிருப்பது தப்பென்றும், லார்ட் ஸைடென்ஹாம் சொல்லுகிறார். 1908-முதல் 3-வருஷகாலத்தில் ஆயிரத்துக்கு 37-ஜனனமும் 34 மரணமும் கணக்கிடப்பட்டிருக்கிறது. அதாவது, 3150-லட்சம் ஜனங்களுள்ள இத்தேசத்தில் வருஷமொன்றுக்கு 100-லட்சம் ஜனங்கள் சாகிறார்கள்.

**பம்பாய் மாகாணத்தில் துஷ்டஜந்துக்களால் நேர்ந்த உயிர்ச்சேதங்கள்.**—சென்றவருஷம் பம்பாய் மாகாணத்தில், துஷ்ட ஜந்துக்களால் நேர்ந்த உயிர்ச்சேதங்கள் முந்திய வருஷங்களைவிட மிருதியாகவிருக்கின்றன. பாம்புக்கடியினால் சென்ற வருஷத்தில் 1,406 மரணங்கள் நேர்ந்திருக்கின்றன. அதற்கு முன்வருஷத்தில் 1,140 மரணங்கள்தாம் நேர்ந்தனவாம். ரத்னகிரி ஜில்லாவில் துஷ்டஜந்துக்களால் நேர்ந்துள்ள மரணங்கள் இன்னும் அதிகமாயிருக்கின்றன. சென்ற மூன்றுவருஷ காலமாய் ஓநாய்களினால் 6,000 கால்நடைகள் அம்மாகாணத்தில் வருஷந்தோறும் நாசமடைகின்றனவாம். ஓநாய்களைக் கொல்பவர்களுக்குக் கொடுக்கப்படும் வெகுமதிக்காகக் கவர்ன்மெண்டார் 65 ரூபாய்தான் செலவிட்டிருக்கிறார்களாம்.

***

**மாம்ஸத்திற்காகக் கோல்லப்படும் ஆடுமாடுகள்:**—பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய மூன்று பட்டணங்களிலும் மாம்ஸத்திற்காக 1912-ம் வருஷத்தில் கொல்லப்பட்ட மிருகங்களின் விவரம்:—

| | |
|---|---|
| ஆடுகள் | 12,15,438 |
| மாடுகள் | 1,12,872 |
| கன்றுகள் | 11,024 |
| பன்றிகள் | 2,860 |

***

**காட்டுமனிதர்களும் ஸ்திரீகளும்.**—மிஸ்டர் வில்லியம்ஸைத் தலைவராகக் கொண்ட இந்திய ஸர்வே அதிகாரிகள், திருவாங்கூர் ஸமஸ்தானத்து எல்லைப் பிரதேசங்களிலுள்ள ஜனஸஞ்சார மற்ற 100 சதுர மைல் விஸ்தீரணமளவும் பரவியிருக்கும் காடுகளில் பிரவேசித்தபொழுது அங்கே ஓரிடத்தில் 13 காட்டு மனிதர்களையும் ஸ்திரீகளையும் கண்டார்கள். அவர்களுக்கு யாதொரு பாஷையும் பேசத் தெரியாதென்றும், அவர்கள் ஜனஸமுகங்களைக் கண்டவர்களே அல்லர் என்றும் அந்த மனிதர்களும் ஸ்திரீகளும் மூங்கில் இலைகளை வஸ்திரங்களாக உபயோகப் படுத்துகிறார்களென்றும் சொல்லப்படுகிறது.

***

**சென்னை ராஜதானியில் பெய்த மழையின் அளவு**

எப்ரல் மாதம் முதல் தேதி முதல்
ஜூலை மாதம் முதல் தேதி வரை.

| | | |
|---|---|---|
| சென்னை | ... | 2·70 |
| கடலூர் | ... | 3·66 |
| நாகப்பட்டணம் | ... | 2·12 |
| கொடைக்கானல் | ... | 17·22 |
| உதகமண்டலம் | ... | 10·83 |
| கோயமுத்தூர் | ... | 1·91 |
| வேலூர் | ... | 6·12 |
| சேலம் | ... | 7·66 |
| திருச்சிஞப்பள்ளி | ... | 2·67 |
| மதுரை | ... | 4·77 |
| திருநெல்வேலி | ... | 0·88 |